# ஸ்ரீ ராமாநுஜன் 172.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஆ ஏப்ரல் & மேமீ<br>சோபகிருத்ஆ சித்திரைமீ | ஸஞ்சிகை 4 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி — 61.

உண்ணிலா வைவ ருடனிருத்தி யிவ்வுலகில்*
எண்ணிலா மாய னெனைநலிய—எண்ணுகின்றான்*
என்று நினைந் தோலமிட்ட இன்புகழ்சேர் மாறனென*
குன்றி விடுமே பவக் கங்குல்.

| | | | |
|---|---|---|---|
| எண் இலா மாயன் | எண்ணிறந்த ஆச்சரிய குண சேஷ்டிதங்களையுடையனான எம்பெருமான் | எண்ணுகின்றான் என்று நினைந்து | திருவுள்ளம் பற்றி விட்டா னென்றெண்ணி |
| இ உலகில் | —இந்நில வுலகத்திலே | ஓலம் இட்ட | —முறையிட்ட |
| உள் நிலாவு ஐவருடன் இருத்தி | உள்ளே வர்த்திக்கிற பஞ்சேந்திரியங்களாகிற பகைவருடன் இருக்கச் செய்து | இன் புகழ் சேர் | —மஹாயசஸ்வியான |
| | | மாறன் என | —ஆழ்வார் என்று அநுஸந்தித்தவாறே |
| | | பவம் கங்குல் | —ஸம்ஸாரமாகிற காளராத்திரியானது |
| எனை நலிய | —என்னை ஹிம்ஸிக்க | குன்றி விடும் | —ஒழிந்துபோம். |

ஆழ்வாரை இந்நிலத்திலே வைத்தது அஸ்மதாதிகளுக்காக. இந்நிலத்தி லிருக்குமளவும் இந்திரியங்களோடே இருக்கவேண்டியது ஸஹஜம். ஆகவே எம்பெருமான் ஆழ்வாரையும் இந்திரியங்களோடே வைக்க வேண்டியதாயிற்று. அது கண்ட வாழ்வார் "இந்திரியங்களானவை எப்படிப்பட்டவர்களையும் படாதபாடு படுத்துமவை யல்லவோ. இப்படிப்பட்ட இந்திரியங்களோடே நம்மைவைத்திருப்பது நம்மை நலிகைக்காகவே போலும்" என்றெண்ணி அப்பெருமானை நோக்கி ஓவென்று முறையிட்டார் *உண்ணிலாவிய வென்னும் திருவாய்மொழியில். அப்படிப்பட்ட ஆழ்வார் திருநாமத்தை உச்சரித்த அளவிலே நம்முடைய ஸம்ஸார பந்தம் தொலையும். எம்பெருமான் கீதையிலே *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று சொல்லி வைத்து, உடனே *மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே* என்றும் சொல்லிவைத்தான். அதாவது—ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரா லவிழ்க்க வொண்ணாதாப் போலே தான் பிணைத்த மாயப் பிறவிப் பிணையானது ஒருவராலும் கழற்ற வொண்ணாதது என்று முன்னம் சொல்லிவைத்து, என் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுவார் யாவரோ அவர்கள் அந்தப் பிணையை எளிதாகக் கழற்றிக் கொள்ள வல்லார்கள் என்று பின்னைச் சொன்னான். அந்தத் திருமுகப் பாசுரத்தில் நம்பிக்கையாலே ஆழ்வார் கீழ்த் திருவாய்மொழியில் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார். மாயப் பிறவி மயர்வறுத்து நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறவேணுமென்று.

அந்த சரணாகதி பலித்ததில்லை. பரதாழ்வானுடைய சரணாகதிக்கு முன்னே தேவதைகளின் சரணாகதி கிடந்ததாய் அதற்குப் பலன் அளித்த பின்னரே பரத சரணாகதிக்குப் பலன் தர வேண்டினாப்போலே—இங்கும் ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இவ்வுலகில் சில ஸம்ஸாரிகள் சரணாகதி செய்திருப்பர்கள் போலும், நாங்கள் வாழலாம்படி ஸர்வோத்துங்கமானதொரு பிரபந்த்த்தை உபகரித்தருள வேணுமென்று சிலர் சரணாகதி செய்திருந்தார்களாகவேணும்; அதுதான் முந்தின சரணாகதியாகையாலே அதற்குப் பலனளித்த பின்னரே ஆழ்வாருடைய சரணாகதிக்குப் பலனளிக்கவேண்டி எம்பெருமான் தாழ்த்தான்.

ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இப்படியொரு சரணாகதி யிருந்திருக்க வேணுமென்னுமிடம் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாலும் தெரியாநின்றது. ஆழ்வார் தாமே பேலே "எண்ணாதனகளெண்ணும் நன் முனிவரின்பந் தலைச்சிறப்பப் பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடி" என்றருளிச் செய்யா நின்றார். திருவாய்மொழி யருளிச் செய்கைக்கு நிதானம் கூறுகிற பாசுரமாயிற்றிது. "எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப" என்றவிடத்து ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிக்கிடந்த பொருளாவது—

திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்னே முனிவர்களெல்லாரும் திரள் கூடி 'எம்பெருமானுடைய பெருமைகளை யெல்லாம் வருணிக்கப் பிறந்த உபநிஷத்துக்களுங்கூட "யதோவாசோ நிவர்த்தந்தே" என்று பின்வாங்கிப் போயின; அப்படி யன்றிக்கே பகவத் ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களை யெல்லாம் செவ்வனே பேசவல்லதொரு பிரபந்தம் அவதரிக்க வேணுமென்று பெருமானைப் பிரார்த்திப்போம்' என்று நினைத்தார்களாம். பிறகு திருவாய்மொழி அவதரித்தான பின்பு அம்முனிவர்கள் மறுபடியும் திரள்கூடி 'எம்பெருமானுக்கு இன்னம் சில குணங்களும் இன்னம் சில விபூதிகளும் உண்டாகவேணும்' என்று நினைத்தார்களாம். இப்படியே நம்பிள்ளை அர்த்தமருளிச் செய்கிறார்.* எண்ணாதனகளெண்ணும் நன் முனிவர்* என்கிற மூலத்திற்கு இங்ஙனே பொருள் சொல்லியே தீரவேண்டும். திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய குண விபூதிகளெல்லாம் கபளீகரிக்கப்பட்டுவிட்டன என்பது பரம தாற்பரியம்.

இப்பாசுரத்தின்படி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களைக் குறையறப் பேசவல்லதொரு பிரபந்தம் திருவவதரிக்க வேணுமென்று ஏற்கெனவே சிலர் சரணாகதி செய்திருக்க வேண்டுகையாலே முந்துற முன்னம் அதற்குப் பலனளிக்க வேண்டி எம்பெருமான் ஆழ்வாருடைய சரணாகதியைப் பழுதாக்கினானென்னலாம். இவருடைய சரணாகதிக்கு இப்போதே பலன் தந்தால் திருவாய்மொழி அரைகுறையாயன்றோ போயிருக்கும். முந்தின சரணாகதிக்குப் பலன் முற்றிற்றாகாதே. திருவாய்மொழி தலைக்கட்ட வேண்டி ஆழ்வாரை இன்னமும் இவ்விபூதியிலே வைத்தானாயிற்று. முன்னமே இவர் "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" என்று வயிறெரிந்திருக்கிறாரே; அந்த வயிற்றெரிச்சல்தானே மேலும் தலையெடுத்து *அந்தோ வடியே னுனபாத மகலகில்லே னிறையுமே யென்று சொன்ன வடியேனை, இன்னமும் அகற்று மவற்றின் நடுவே யிருத்தித் துடிக்கவைப்பது தருமமோவென்று கூப்பிடுகிறார் *உண்ணிலாவிய வென்னு மித்திருவாய்மொழியில்.

ஜிதேந்திரியரில் தலைவரான ஆழ்வார் இந்நிலத்தி லிருப்புக்குத் துடிக்கவேண்டிய அவசியமுண்டோ? விஷயங்களும் இந்திரியங்களும் இருந்தாலென்ன? அவற்றில் ஆழ்வார் கலங்குகைக்கு ப்ரஸக்தி யில்லையே, துடிப்பானேன்? என்னில்; இதற்கு ஆழ்வார் தாமே

இப்பதிகத்தில் ஆறும் பாட்டில் ஸுஸ்பஷ்டமாக உத்தர மருளிச்செய்கிறார் "விண்ணுளார் பெருமாற் கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுளென்னைப் பெற்றால் என் செய்யா மற்று நீயும் விட்டால்" என்று.

* மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூற அவதரித்த மங்கையர்கோன் தம்முடைய பெரிய திருமொழியிலே இத்திருவாய்மொழியை விவரியா நிற்பாராய் இரண்டு திருமொழிகள் அருளிச் செய்கிறார். [திருவுக்குந் திருவாகிய செல்வா. 2. மாற்றமுள.]

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்; — "*முடியானேயிற் கரணங்களையுடைய இவர்க்கு இந்த்ரிய வச்யதை யுண்டென்னுமிடம் இதோடு விருத்தமன்றோ என்னில்; அசல் அகம் நெருப்புப் பட்டு வேவா நின்றால் தந்தாம் அகம் பரிஹரியா திருப்பாரில்லையிறே; புற்றினருகே பழுதை கிடந்தாலும் ஸர்ப்பம் என்று புத்தி பண்ணி ப்ரமிக்கக் கடவதா யிருக்குமிறே. அங்குத்தைக்கும் இங்குத்தைக்கும் பொதுவான வுடம்போடே யிருக்கிற படியைக் கண்டார்; நாட்டாரடைய இந்த்ரிய வச்யராய்க் கிடந்து நோவுபடுகிற படியையும் கண்டார்; இது நம்மளவும் வரில் செய்வதென்? என்று அஞ்சிக் கூப்பிடுகிறார்." என்பன ஈட்டு ஸ்ரீஸூக்திகள். இந்த ப்ராக்ருத மண்டலத்திலே யிருந்தால் என்ன அநர்த்தம் விளையுமோ என்கிற அச்சம் மேலிட்டு ஓலமிடுகிறார் என்றதாயிற்று. .... .... (*)

## ஸ்ரீ பாஷ்ய ச்ருத ப்ரகாசிகாதிகாரிகளுக்கு

ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகையை ஒரு ஸமயம் ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு ஒத்திட்டுப் பார்த்துப் பரிசீலனை செய்ய நேர்ந்தது. அப்போது ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் சோதிக்கப்பட்டவற்றுள் சிலவற்றை இங்கு விஜ்ஞாபனம் செய்துகொள்கிறேன். 1908-ம் வருஷத்தில் தெலுங்கு லிபியில் ச்ருதப்ரகாசிகையுடன் பதிப்பித்திருக்கும் ஸ்ரீ பாஷ்ய ஸ்ரீகோசத்தை வைத்துக்கொண்டு இந்தத் திருத்தங்கள் தெரிவிக்கப்படுகின்றன. பக்க லக்கங்கள் அந்த ஸ்ரீ கோசத்தைச் சார்ந்தவையே. அதில் (பக்கம் 17-ல் "**संस्कारो हि नाम**" என்கிற ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியை விவரிக்கப் புகுந்த ச்ருதப்ரகாசிகையின் அவதாரிகையில் "**ननु कर्मत्वमात्रावगमात् संस्कार्यत्वम्**" என்றிருப்பதை "**ननु न कर्मत्वमात्रावगमात् संस्कार्यत्वम्**" என்று திருத்துக. (பக்கம் 23-ல் ச்ருதப்ரகாசிகையின் வரி 4-ல் "**क्वचित् सामावयवेषु पञ्चसु एकैकावयवोपासनं विधीयते**" என்றதற்கு மேல் "**क्वचिच्च अवयवावयवभूत प्रणवाद्युपासनं विधीयते**" என்கிற வாக்யம் விட்டுப்போயிருக்கிறது; எழுதிக்கொள்க. (பக்கம் 26-ல்) ச்ருத ப்ரகாசிகையின் வரி 11-ல் "**तत्र समादिभिस्सह**" என்பதை "**तत्र शमादिभिस्सह**" என்று திருத்துக. (பக்கம் 27-ல்) ச்ருதப்ரகாசிகையின் வரி 2-ல் "**ज्ञानाकर्म**" என்றிருப்பதை "**ज्ञान कर्म**" என்று திருத்துக. (பக்கம் 29-ல்) ஸ்ரீ பாஷ்யத்தில் முதல் வரியில் "**चन्द्रैकत्वेन ज्ञातेऽपि**" என்றிருப்பதை "**चन्द्रैकत्वे ज्ञातेऽपि**" என்று திருத்துக. அதே பக்கத்தில் ச்ருதப்ரகாசிகையின் வரி 17-ல் "**वर्जनीय एव**" என்பதில் அகாரப்ரச்லேஷமிட்டு "**अवर्जनीय एव**" என்று ஸேவிக்கவேணும். (பக்கம் 31-ல்) ச்ருதப்ரகாசிகையின் வரி 25-ல் "**अथ योऽन्यां देवतामुपास्त इत्येतद्वाक्यपूर्वकत्वात्**" என்பதில் "**स योऽत एकैकमुपास्त इत्येतद्वाक्यपूर्वकत्वात्**" என்று

திருத்தம் வேணுமென்று சில பெரியார் கூறுகின்றனர்; ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில் அவ்வண்ணமாகவே அநுவாதம் காண்கிறது. இதனை ப்ராஜ்ஞர்கள் பரிசீலிக்கவேணும். (பக்கம் 36-ல்) 7, 8 வரிகளில் "**अतो विविदिषासाधनत्वं कर्मणां युक्तम्**" என்பதில் "**न युक्तम्**" என்று திருத்துக. (பக்கம் 38-ல்) வரி 16-ல் '**कषाये पक्के**' என்பதற்கிடையில் (அல்லது முன்னே) **कर्मभिः** என்றொரு பதம் விடுபட்டிருக்கிறது. (பக்கம் 41-ல் ச்ருதப்ரகாசிகையின் வரி 21-ல் '**आपातप्रतीतेरेव**' என்றிருப்பதை '**आपातप्रतीतिरेव**' என்று திருத்துக. (பக்கம் 46-ல்) ச்ருதப்ரகாசிகையின் வரி 2-ல் "**पूर्वोक्तवाक्यानामेकवाक्यत्वरूपन्यायपरिहार्यत्वात्**" என்றிருப்பது "**पूर्वोक्तवाक्यानाम् एकन्यायपरिहार्यत्वात्**" என்றே தாளகோசத்திற் காண்கிறது. (பக்கம் 49-ல்) ஸ்ரீ பாஷ்யத்தில் வரி 3-ல் "**तमेवं विदित्वाऽतिमृत्युमेति**" என்றுள்ளதில் "**तमेव विदित्वा**" என்று திருத்தவேணும். அநுஸ்வாரம் அதிகம். இங்கு ச்ருதப்ரகாசிகையிலும் **तमेवमिति** என்று ப்ரதீகதாரண மிருப்பதை **तमेवेति** என்று திருத்தவேணும். கீழே (பக்கம் 25-ல்) ஸ்ரீ பாஷ்யத்தில் வரி 5-ல் **तमेव विदित्वा** என்று அநுஸ்வார ரஹிதமாகவேயுள்ளது; அங்கு ச்ருதபரகாசிகை மாத்திரம் திருத்தப்படவேணும் **तमेवेति** என்று. பக்கம் 51-ல் ச்ருதப்ரகாசிகை வரி 30-ல் "**पूर्वं बाधित्वेव**" என்பதை **पूर्वं बाधित्वैव** என்று திருத்துக. (பக்கம் 54-ல்) ச்ருதப்ரகாசிகை வரி 9-ல் "**न पर्यायत्वदोषप्रसक्तिः**" என்றது "**न पर्यायत्वादिदोष प्रसक्तिः**" என்று எட்டிலுள்ளது. (பக்கம் 55-ல்) ச்ருதப்ரகாசிகை கடைசி வரியில் "**गुणतो मेद्यः**" என்பது '**गुणतो भेदः**' என்றிருக்கத் தக்கது. (பக்கம் 60-ல்) ச்ருதப்ரகாசிகை வரி 16-ல் "**ज्ञेयभेदनिषेधादेव ज्ञानभेदोऽपि निरस्त इत्यर्थः**" என்றவிடத்து "**ज्ञानज्ञेयभेदोऽपि**" என்று எட்டிலுள்ளது; இதை ப்ராஜ்ஞர்கள் ஆராயவேணும். (பக்கம் 62-ல்) ச்ருதப்ரகாசிகை வரி 15-ல் '**जायमानयोरपि**' என்பதை '**ज्ञायमानयोरपि**' என்று திருத்துக. (பக்கம் 63-ல்) ச்ருதப்ரகாசிகை கடைசியிலிருந்து 3-வது வரியில் '**दृष्टान्तस्य साध्यविकल्पत्वं स्यात्**' என்பது "**साध्य-विकलत्वं स्यात्**" என்றிருக்கவேணும். (பக்கம் 77) ச்ருதப்ரகாசிகைவரி 12-ல் "**पटव्यवहाराप्रसंगस्य**" என்பது "**पटव्यवहारप्रसङ्गस्य**" என்றிருக்கத் தக்கது. (பக்கம் 79-ல்) ச்ருதப்ரகாசிகை வரி 18-ல் "**गोत्वादिमेद उक्तः**" என்றது "**गोत्वादिर्भेद उक्तः**" என்றிருக்கத்தக்கது. (பக்கம் 83-ல்) ஸ்ரீ பாஷ்யம் வரி 9-ல் **नानुभव्यत्वम्** என்பது **नानुभाव्यत्व**மாகவேணும். அதே பக்கத்தில் ச்ருதப்ரகாசிகை கடைசியிலிருந்து 3-வது வரியில் "**अपि तु स्वयंप्रकाशत्वे सति**" என்றதில் "**अस्वयंप्रकाशत्वे सति**" என்றிருக்கவேணும். (பக்கம் 84-ல்) ச்ருதப்ரகாசிகை வரி 7-ல் "**स्वयं प्रकाशत्वं समानाधिकरणं च**" என்பதை "**स्वयं प्रकाशत्वसमानाधिकरणं च**" என்று ஸமஸ்தமாக்குக. (பக்கம் 85-ல்) ச்ருதப்ரகாசிகை கடைசியிலிருந்து 6-வது வரியில் '**अर्थापरयन्तरमप्याह**' என்றதில் அபி சப்தம் வர்ஜிக்கவேணும். அதற்கடுத்த வரியில் "**अर्थापरयन्तरमाह**" என்றதில் அந்த அபியைச் சேர்ப்பது. இங்ஙனே பல திருத்தங்கள் செய்ய வேண்டியவை யுள.

ச்ருத ப்ரகாசிகைக்கு ப்ரசாரம் மிகவும் குறைந்திருக்கு மிக்காலத்தில் இந்தத் திருத்தங்களைக் காட்டுவது வீண் ப்ரயாஸமென்றும் சிலர் கருதக்கூடும். "**कालो ह्ययं निरवधिर्विपुला च पृथ्वी**" என்று பவபூதி மஹாகவி சொன்ன கணக்கிலே காலதேச விசேஷங்களில் ஸபலமாகுமென்பது எமது எண்ணம். ச்ருத ப்ரகாசிகா ஸ்ரீகோசம் இப்போது மிகவும் துர்லபமாய்விட்டது. அதனை தேவநாகர லிபியில் புநர்முத்ரணம் செய்விக்கவேணுமென்கிற சிரத்தையினால் மூன்றடி சோதித்து வைப்பதில் விருப்பமுண்டாயது. .... (*)

# நல்வார்த்தை நானூறு

[ முன் தொடர்ச்சி. ]

53. பகவத் கீதையில் "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:" என்று கண்ணபிரான் தானே சோதி வாய் திறந்தருளிச் செய்தபடி அநுஸந்திப்பவர்களுக்கு புநர் ஜந்ம நிராஸகமாய் பரம புருஷார்த்த ப்ராபகமா யிருக்கின்ற கண்ணபிரானது திவ்ய சேஷ்டிதங்கள் எவை யென்றால் கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே "**धूर्तायितं तव हि यत्किल रासगोष्ठ्यां तत्कीर्तनं परमपावनमामनन्ति**—தூர்த்தாயிதம் தவ ஹி யத் கில ராஸகோஷ்ட்யாம் தத்கீர்த்தநம் பரம பாவநமாமநந்தி" என்றருளிச் செய்தபடியே கண்ணபிரான் செய்த தூர்த்தக்ருத்யங்களே யென்னத் தட்டில்லை. *மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்கு, கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி, நிச்சலுந் தீமைகள் செய்வாய்!* என்கிற இப்புடைகளிலேயுள்ள ஆழ்வார் பாசுரங்களை எம்பெருமான் திருமுன்பே குழாங்கூடி உத்கோஷித்தால் அப்பெருமானுடைய திருமுக மண்டலம் மலர்ந்து விளங்குவதைக் காணாநின்றோம்.

54. இப்படிப்பட்ட தூர்த்த க்ருத்யங்களினால் கண்ணபிரானுக்கு ப்ரஹ்மசர்ய ஹாநி வாராதோ வென்று சிலர் சங்கிப்பதுண்டு. இதைப் பற்றி யாதவாப்யுதயத்தில் (4—64) ஸாதிக்கிற ஒரு ச்லோக ரத்னம் கேண்மின்;

"**विमोहने वल्लवगेहिनीनां न ब्रह्मचर्यं बिभिदे तदीयम् ।**
**संपत्स्यते बालकजीवनं तत् सत्येन येनैव सतां समक्षम् ॥**

விமோஹநே வல்லவ கேஹிநீநாம் ந ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம்,
ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்." என்பது.

கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களில் ஜாரக்ருத்யங்கள் பல பல காண்கின்றன. "தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத் தடங் கொண்டு புக்கு, முத்தார் கொங்கை புணர்ந்து இரா நாழிகை மூவேழு சென்ற பின் வந்தாய்" என்ற பெரியாழ்வார் திருமொழி போன்ற பல திருமொழிகளை நாம் அநுஸந்தித்து வருகின்றோம். இப்படிப்பட்ட ஜாரக்ருத்யங்கள் எம்பெருமானுக்குத் தகுமா? இவற்றால் அவனுடைய ப்ரஹ்மசர்யத்திற்குக் குறைபாடு நேராதா? என்று சங்கிப்பாருடைய சங்கையைத் தீர்க்கவே இந்த ச்லோகம் திருவவதரித்தது. இப்படிப்பட்ட சேஷ்டிதங்கள் எத்தனை செய்த வளவிலும் கண்ணபிரானுடைய ப்ரஹ்மசர்யம் சிறிதும் குறைபாடுற்றதில்லை. ஏனெனில், பாரத யுத்த ஸமயத்தில் அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை யென்பவளுடைய கருவை நோக்கி அச்வத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்த்ரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரீக்ஷித்] நீறாகியொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர் பெறுத்த வேணுமென்று ஸுபத்ரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரை மலர் போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக ஸ்பர்சித்தருள உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர் பெற்றமை ப்ரஸித்தம். அப்படி கண்ணபிரான் திருவடியினால் ஸ்பர்சிக்கும்போது "**यदि मे ब्रह्मचर्यं स्यात् सत्यं च मयि तिष्ठति । अव्याहतं ममैश्वर्यं तेन जीवतु बालकः ॥** — யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யம் ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:" [நான் உண்மையான ப்ரஹ்மசாரியாக [அஸ்கலித வீர்யனாக] இருப்பேனாகில் ஸத்யவாதியாயுமிருப்பேனாகில் இந்த சிசு உயிர் பெற்று எழுந்திருக்கட்டும்.] என்று சபதஞ் செய்தருளினதாகப் புராணங்கள் கூறுகின்றன. இதையே இந்த ச்லோகம் எடுத்துக் காட்டிற்று. "அது விது வுது வென்னலாவன வல்ல, என்னையுன் செய்கை நைவிக்கும்" என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி பகவானுடைய சரிதையா யிருந்தால் எதுவும் பரம பாவநமேயாம்.

55. நம்மாழ்வார் *வீடுமின் முற்றவும் என்கிற திருவாய்மொழியிலே முதன் முதலாக ஸம்ஸாரிகளுக்கு உபதேசிக்கத் தொடங்குகிறார். எதை உபதேசிக்கிறாரென்னில்; பக்தியை யுபதேசிக்கிறார். *மயர்வற மதிநல மருளினன்* என்று தாமே யருளிச் செய்தபடியே எம்பெருமானுடைய திருவருளாலே கிடைத்த பக்தியை உபதேசிக்கிறாரே யொழிய வேதாந்த விஹிதையான பக்தியை உபதேசிக்கிறாரல்லர் என்பது ஆசார்யர்களின் திருவுள்ளம். இதற்குமேல் ஒருவர் கேட்டார்—“வேதாந்த விஹிதையான பக்திதான் ஆழ்வாருடைய பக்தி, அந்த பக்தியையே ஸம்ஸாரிகளுக்கு முபதேசிக்கிறார்” என்று கொண்டால் என்ன குறை? என்று (கேட்டார்); அப்படி கொள்ளக்கூடாது என்பதை ஈடு முப்பத்தாறாயிரப்படியில் இரண்டு ஹேதுக்களாலே ஸாதிக்கிறார்—அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு: “இதுதான் வேதாந்த விஹிதையான பக்தி தானே யானாலோவென்னில்; ஸர்வேச்வரன் அருள இவர் பெற்றாராகிற ஏற்றம் போம்; அபசூத்ராதி கரண ந்யாய (விரோத)மும் ப்ரஸங்கிக்கும்” என்று. இந்த ஸ்ரீஸூக்தியின் கருத்து யாதென்னில்; ஆழ்வார்க்கு உள்ள பக்தியானது வேதாந்தங்களிலே ஸாங்கோபாங்கமாக விதிக்கப்பட்ட பக்திதான் என்றும்; அதனையே ஆழ்வார் முயற்சி செய்து ஸம்பாதித்தாரென்றும் சொல்லுகிற பக்ஷத்தில் ஆழ்வார் தாமே *மயர்வற மதிநல மருளினன்* என்று தமக்குச் சொல்லிக் கொள்ளுகிற ஏற்றம் இல்லாமற் போய்விடும். தவிர ஆழ்வார் உபதேசிப்பதானது பிராமணர்களுக்கு மாத்திரமன்றிக்கே ஸகல வர்ணஸ்தர்களுக்கு மாகையாலே சதுர்த்தர்களுக்கும் உபதேசிக்கிறாரென்று தேறுகையாலே அபசூத்ராதி கரண ந்யாய விரோதமும் ப்ரஸங்கிக்கும்—என்பதேயாம். ஆகவே, இங்கு அபசூத்ராதி கரண ந்யாய விரோத ப்ரஸஞ்ஜநம் செய்வதானது உபதேஷ்டாவான ஆழ்வார் விஷயத்தி லன்றிக்கே உபதேசத்திற்கு லக்ஷ்யபூதர்கள் விஷயத்திலே—என்றதாயிற்று. இத்தால் நம்பிள்ளை ஆழ்வாரை சூத்ரராகவே ஸ்தாபித்து விட்டதாக இந்த ஸ்ரீஸூக்தியால் தேறுகிறதென்று சிலர் அஸ்தானே கலங்கிக் கூறுவது நிரஸ்தமாயிற்று.

56. உபதேஷ்டாவான ஆழ்வார் விஷயத்தில் தான் இந்த ப்ரஸஞ்ஜநம் நம்பிள்ளையினால் செய்யப்பட்டது என்று வைத்துக் கொண்டாலும் குறையில்லை. எங்ஙனே யென்னில், ஆழ்வார் மயர்வற மதிநல மருளப் பெற்றா ரென்பது கொண்டே யன்றோ ஆழ்வார்க்கு நாம ஏற்றம் சொல்லுகிறோம்; அந்த ஏற்றத்தை இல்லை செய்யுமவர்களன்றோ ஈட்டில் ப்ரதிபக்ஷிகளாக நிற்கிறார்கள். அவர்களுடைய கருத்தாலே ஆழ்வார் விசிஷ்ட வ்யக்தியாகத் தேறாமல் ஸாமாந்ய வ்யக்தியாகவே தேறுகிறபடியாலே அவர்களுடைய அபிப்ராயத்திற்குச் சேர இந்த ப்ரஸஞ்ஜநம் செய்தபடியாகிறது. ஆகவே ஒருவிதத்திலும் அவத்யமில்லை.

57. ஈச்வரனை யொப்புக் கொள்ளாத நாஸ்திக மதங்கள் கிடக்க; ஈச்வரனுளானென்று ஒப்புக் கொள்பவர்களுள் தார்க்கிகன் அநுமானத்தினால் ஈச்வரனை ஸாதிக்கின்றான். உலகத்தில் காணப்படுகின்ற பானை துணி வீடு மண்டபம் கோபுரம் முதலிய பொருள்களெல்லாம் ஒரு கர்த்தாவையோ பல கர்த்தாக்களையோ உடையனவாகியே யிருப்பதால் இப்பிரபஞ்சமும் ஒரு கர்த்தாவை யுடையதாகியே யிருக்கவேண்டும்; அந்த கர்த்தாவே ஈச்வரன்—என்பது தார்க்கிகர்களின் அநுமாநம். இவ்வநுமானங் கொண்டு ஈச்வரனை ஸாதிப்பது தவறு; ஏனெனில், இவ்வநுமாநத்தினால் ஈச்வரனே தேறவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. விச்வாமித்ர முனிவரும் பல ஸ்ருஷ்டிகளைச் செய்து விட்டதாக நாம் ஸ்ரீராமாயணம் முதலிய நூல்களைக் கொண்டு அறிவதால் அம்முனிவரைப் போன்ற விலக்ஷண சக்தி

வாய்ந்த ஒரு புருஷன் பிரபஞ்சத்திற்குக் கர்த்தாவாகத் தேறலாம். தவிரவும், தர்க்கமென்பது ஒரு நிலையில் நில்லாது. தர்க்கமென்பது யுக்திவாதந்தானே. அது அவரவர்களுடைய வாக் சாதுர்யத்தைப் பொறுத்தது. ஒரு தர்க்கம் மற்றொரு தர்க்கத்தினால் தள்ளுண்டு போகவுங் காண்கிறோம். இங்கும் அங்ஙனே யாகுமாகில், பிரபஞ்சமெல்லாம் இயற்கையாகவே தோன்றுகின்றதென்னும் நிரீச்வர வாதமே முடிவு பெறக்கூடும். அவ்வாபத்திற்கு இடமறும்படி வியாஸ முனிவர் தாம் செய்த [ப்ரஹ்மஸூத்ர மென்னும்] சாரீரக மீமாம்ஸையில் "ஶாஸ்த்ரயோநித்வாத்—சாஸ்த்ர யோநித்வாத்" என்றொரு ஸூத்ர மியற்றி வேத சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரன் அறியத்தக்கவன் என்று முடிவு செய்தார். நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "உளன் சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்கிற பாசுரத்தினால் தமது ஸித்தாந்தமு மதுவே யென்று காட்டியருளினார். .... .... (*)

58. தற்காலம் உலகில் எங்கும் இதர பாஷைகளின் பயிற்சி ஓங்கி வளர்ந்து வருகிறபடியால் ஸம்ஸ்க்ருத பாஷைப் பயிற்சி மிகவும் குன்றிவிட்டதென்றே சொல்லலாம். ஆனால் ஸம்ஸ்க்ருத வித்யாப்யாஸம் அடியோடு லோபபடைந்து விட்டதென்று சொல்ல முடியாது; ஆங்காங்கு அதுவும் நடந்துதான் வருகிறது. ஆனால் வேதாந்தப் படிப்பென்பது மிகவும் குறைந்துவிட்டது. அதிலும் விசிஷ்டாத்வைத வேதாந்தப் படிப்பு முழுமோசமாய் விட்டது. சிரோமணி பரீக்ஷைகளில் வேதாந்த சிரோமணி பரீக்ஷையும் சில விடங்களில் வைக்கப்பட்டிருப்பதால் அதற்காகச் சிலர் வேதாந்த நூல்களைப் படிப்பதுண்டு. எனினும் ப்ராசீன ரீதியில் வேதாந்தம் க்ரஹிக்கிற முறை அறவே மறைந்துவிட்டது. ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான மஹாக்ரந்தங்களை, சொக்காய் போட்டுக்கொண்டும், நாற்காலிகளில் காலைத் தொங்கவிட்டுக் கொண்டும் கற்பிப்பவர்களும் கற்பவர்களுமே ஆங்காங்குக் காணப்படுகிறார்கள். நியம பூர்வமாகக் காலக்ஷேபம் செய்வதென்கிற பத்ததி ச்ரமப்பட்டுச் சில விடங்களில்தான் காணக் கூடியதாயிருக்கின்றது. இது வைதிகர்களுக்கு மிகவும் சோசநீயமான விஷயம். முறை தவறி க்ரஹிப்பதனால் பவித்திரமான ஞானம் உண்டாவது அரிதே.

59. இக்காலத்தில் பத்ரிகைகளின் ப்ரசாரமும் உபந்யாஸ கோஷ்டிகளும் எங்கும் வளர்ந்து வருகின்றன, 'பத்ரிகைகளை வாசித்துவிட்டால் நமக்கு எல்லாம் எளிதாகத் தெரிந்து விடுகிறது' என்றும், 'உபந்யாஸங்கள் கேட்டுவந்தால் அதிலிருந்தே நாம் எதையும் தெரிந்துகொள்ள முடியும்' என்றும் நினைத்து இக்காலத்தவர்கள் பத்ரிகைகள் வாசிப்பதிலும் உபந்யாஸங்கள் கேட்பதிலும் குதூஹலம் கொள்ளுகிறார்கள். இது தவறென்று நாம் சொல்ல வரவில்லை. மிக நன்றே. ஆனால் பத்ரிகைகளில் வாசிக்கிற விஷயங்களும் உபந்யாஸங்களில் கேட்கிற விஷயங்களும் நன்கு க்ரஹிக்கப்படவும் தரிக்கப்படவும் வேண்டுமானால் அதற்கு எவ்வளவு யோக்யதை வேணுமென்பதை அவரவர்கள் ஆலோசிக்கவேணும்.

60. 'ஸ்ரீபாஷ்யத்தைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டால் உலகுக்கு மஹோபகாரமாயிருக்கும்' என்று......இப்படிப்பட்ட பல கோரிக்கைகளைப் பலர் வெளியிடுவதுண்டு. உயர்ந்த கடினமான நூல்களை மொழி பெயர்த்து விடுவதனால் என்னாகும்? ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள நூல்களெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷை யறிந்தவர்களுக்குப் பொருள்படுகின்றனவா? தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்களெல்லாம் தமிழ் மொழியறிந்தவர்களுக்குப் பயன்படுகின்றனவா? என்று சற்று ஆலோசிக்கவேண்டும். விஷயங்களிலுள்ள கடினத்தன்மையானது மொழி பெயர்ப்பினால் போய்விடுமா? ஒருகாலும் போகாது. வேதாந்த நூல்களிலோ வியாகரண நூல்களிலோ தர்க்க க்ரந்தங்களிலோ வுள்ள பங்க்திகள் பெரும்

பாலும் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்குப் பரிசிதமான பதங்களும் வார்த்தைகளும் நிரம்பியவையே. அவ்வளவால் என்னுகிறது. பதப்பொருள் சொல்லிவிடலாமானாலும் கருத்து சிறிதும் தெரியாதன்றோ. அதற்கு என்ன காரணம்? விஷயங்களில் இயற்கையாயுள்ள கடினத்தன்மையே காரணம். குருகுல வாஸஞ் செய்து பங்க்திகளின்மேல் பலகால் உபதேசம் கேட்டாலொழிய கடினமான விஷயங்கள் மனத்திற் பதிய விரகில்லை. ஆகவே நம் முன்னோர்கள் கைப்பற்றியிருந்த வழியில் வித்யாக்ரஹணம் செய்வது மிகவும் அவசியமானது. இதை நாம் ஆசைப்படுவது வீணே. ——

## 61. இதையும் நல்வார்த்தைகளில் ஒன்றாகக் கொள்க.

## ஸ்ரீ காஞ்சி - தேவப்பெருமாள் ப்ரஹ்மோத்ஸவம்.

பெரும்பாலும் திவ்யதேசங்கள் தோறும் ப்ரஹ்மோத்ஸவம் நடந்தாலும் காஞ்சீபுரத்தில் தேவப்பெருமாளுக்கு நடைபெறும் ப்ரஹ்மோத்ஸவமானது தனிப்பட்ட பெருமையுடைய தென்பது தரணி முழுதும் ப்ரஸித்தமானது. "வையங் கண்ட வைகாசித் திருநாள்" என்றே பெரியோர்கள் வழங்கி வந்தார்கள். உலகமெல்லாம் திரண்டு வந்து ஸேவிக்கும் வைசாகோத்ஸவம் என்றபடி. இம்மஹோத்ஸவத்தை எந்நாட்டினரும் ஸேவித்தே யிருப்பதால் இதன் பெருமைகளைப் பற்றி இங்கு நாம் விவரிக்கவேண்டிய அவசியமில்லை. "கஞ்சி கருட ஸேவ" என்று ஸாமான்ய ஜனங்கள் வழங்குவது இம்மஹோத்ஸவத்தையே. 10 நாள் இரண்டு வேளையும் நடைபெறும் இம்மஹோத்ஸவத்தில் மூன்றாவது நாள் காலை ஒருவேளை மட்டுமே கருடஸேவை யுள்ளது. ஆனாலும் அதன் ப்ராதான்யத்தை நோக்கி ஸாமான்ய ஜனங்கள் 'கஞ்சி கருட ஸேவ' என்றே இம்மஹோத்ஸவத்தை வழங்கி விடுவது வழக்கம்.

இந்த ப்ரஹ்மோத்ஸவம் நாளை ஜுன்மீ 3உ திங்கட்கிழமை யன்று தொடக்கமாகும். அதாவது வைகாசிமீ 20உ த்வஜாரோஹணம். 5—6—63 புதன்கிழமை காலை கருடோத்ஸவம். நம்மாழ்வார் சாத்துமுறை வைபவமும் அன்றுதான். 9—6—63 ஞாயிற்றுக்கிழமையன்று திருத்தேர் (ரதோத்ஸவம்.) திருத்தேர் அன்றே நிலை சேர்ந்துவிட்டால் 11—6—63 செவ்வாய்க்கிழமையன்று அவப்ருதமாகி மறுநாளிரவு த்வஜாவரோஹணமாகும்.

இம்மஹோத்ஸவத்தில் உபயவேத கோஷ்டிகளும் வெகு சிறப்பாக நடைபெறுவது அநாதிகாலமாக வுள்ளது. பொதுவாக ஸகல ஜனங்களுக்கும் ஆங்காங்கு போஜன ஸௌகரியங்கள் ஏற்பட்டே யிருக்கின்றன. திவ்ய ப்ரபந்த கோஷ்டி ஸ்வாமிகளுக்காக ஸ்ரீமான் உ. வே. A. K. ரங்காசாரியர் (Ritired Railway Engineer) பல பெரிய மனிதர்களை அங்கத்தினராகக் கொண்ட ஒரு ஸபையை ஏற்பாடு செய்து அதன் மூலமாக அனேக கனதனவான்களிடம் த்ரவ்யமாகவும் அமுதுபடியாகவும் வஸூல் செய்து கீழண்டை மாடவீதி, 31 நெ. வேத வேதாந்த வைஜயந்தீ பாடசாலை பவனத்தில் 1960-ஆம் வருஷம் முதல் ஷை உத்ஸவம் 10 நாளும் இரண்டு வேளையும் மிகச் சிறந்த ததீயாராதனை நடத்தி வருவது பிரசித்தமானதே. இவ்வருஷமும் வழக்கப்படி நடக்கிறது. திவ்யப்ரபந்தாதிகாரிகளான ஸ்வாமிகள் எழுந்தருளியிருந்து கோஷ்டியைச் சிறப்பிக்க வேணுமென்பதும் கனதனவான்கள் உபகரிக்க வேணுமென்பதும் பிரார்த்தனை. ——

ஸ்ரீ:

# "उपमा कालिदासस्य— உபமா காளிதாஸஸ்ய"

கவிதைகளில் உவமை கூறுவது, சீரிய பொருள்களை வைப்பது, லலிதமான பதங்களை ப்ரயோகிப்பது என்றிப்படி சில சுவைகள் உண்டு. மஹாகவிகளின் வாக்குக்களில் இவையெல்லாம் முயற்சியின்றிக்கே அமையும். ஆனாலும் ஒவ்வொரு மஹாகவி வாக்கில் ஒவ்வோர் அதிசயம் அமைந்திருப்பதாக முன்னோர்கள் கண்டறிந்து கூறியுள்ளார்கள்.

"उपमा कालिदासस्य भारवेरर्थगौरवम्। दण्डिनः पदलालित्यम्—

உபமா காலிதாஸஸ்ய பாரவேரர்த்த கௌரவம், தண்டிந; பதலாலித்யம்" என்கிற வொரு சுலோகம் பிரஸித்தமானது. காலிதாஸருடைய வாக்கில் உவமை விசேஷமாகக் காணப்படும்; பாரவியின் வாக்கில் பொருட்சிறப்பு பொலியும். தண்டியின் வாக்கில் லலிதபத ப்ரயோகங்கள் அமையும்— என்பதாக இந்த ச்லோகத்தில் தெரிவிக்கப் படுகிறது.

மற்ற கவிகளை விட்டுக் காலிதாஸருடைய உபமாசாதுர்யம் இங்கெடுத்துக் கூறப்படுகின்றது. இவரியற்றிய காவியங்களுள் ரகுவம்சம் ஸுப்ரஸித்தமாக வழங்குவது. இதில் ஆரம்பச்லோகம் முதற்கொண்டு வரிசையாக வாசித்துக் கொண்டு போனால் பெரும்பாலும் உவமை கொண்ட சுலோகங்களே காணப்படும். முதல் சுலோகம் :

* **वागर्थाविव संपृक्तौ**– வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ. (2) ***तितीर्षुर्दुस्तरं मोहादुडुपेनास्मि सागरम्**– திதீர்ஷுர் துஸ்தரம் மோஹாத் உடுபேநாஸ்மி ஸாகரம்.* இதில் உபமா வாசகமான இவ காரம் இல்லையாகிலும் உவமைதானென்பது நிஸ்ஸந்தேஹம். (3) **प्रांशुलभ्ये फले लोभात् उद्बाहुरिव वामनः**— ப்ராம்சுலப்யே பலே லோபாத் உத்பாஹுரிவ வாமந: * (4) **मणौ वज्रसमुत्कीर्णे सूत्रस्येवास्ति मे गतिः**—மணௌ வஜ்ரஸமுத்கீர்ணே ஸூத்ரஸ்யேவாஸ்தி மே கதி:* ... ... இங்ஙனே கண்டு கொள்வது. எந்த ஸர்கத்திலெடுத்துப் பார்த்தாலும் உவமை கூறுதலில்லாத சுலோகம் தேடிப்பிடிக்க வேண்டியதாகவே யிருக்கும்.

மேலே காட்டியவற்றுள் முதல் சுலோகத்து உபமையைச் சிறிது ஆராய்வோம். அதில் உத்தரார்த்தத்தில் பார்வதீ பரமேச்வரர்களின் வந்தனம் கூறப்பட்டுள்ளது: அந்த திவ்ய தம்பதிகள் இணைபிரியாமல் குண குணிகள் போலவும் தர்ம தர்மிகள் போலவும் நித்ய ஸமவேதர்களா யிருக்கும்படியை **ஸம்ப்ருக்தௌ** என்கிற பதத்தினால் காட்டி அதற்கு உவமை கூறுகின்றார் "**वागर्थाविव**–வாகர்த்தாவிவ" என்று. இது மிகச் சிறந்த உபமானம். மேல் இரண்டாவது ஸர்க்கத்தின் இரண்டாவது சுலோகத்தில், திலீபமஹாராஜனுடைய தருமபத்தினியான ஸுதக்ஷிணையானவள் காமதேனு சென்ற வழியைப் பின் தொடர்ந்தாள். என்று சொல்லி அதற்கு உவமையாக "**श्रुतेरिवार्थं स्मृतिः**- ச்ருதேரிவார்த்தம் ஸ்ம்ருதி:" என்று கூறினது போலவும் அதைவிட மேம்பட்டதாகவும் அமைந்துள்ளது "**வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ**" என்னுமிந்த உபமை. சொல்லும் பொருளும் எப்படி ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திருக்க மாட்டாதோ அப்படி பார்வதீ பரமேச்வரர்கள் "**अर्धो वा एष आत्मनो यत्पत्नी**" என்று வேதமோதினபடியே யிருக்கையாலே ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்திரார் என்றதாயிற்று.

உபமேயார்த்தம் நிற்க. உபமாநார்த்தத்தை ஊன்றி நோக்குவோம், வாசகமும் வாச்யமும் ஒன்றைவிட்டொன்று பிரியாமல் நித்யஸம்ச்லிஷ்டமாகவே யிருக்குமென்ற விது ஸாமான்யமான அர்த்தமன்று; தத்வார்த்தம். நம்மாழ்வாரும் நம் ஆசாரியர்களும் நிலையிட்ட அர்த்தமிது. திருவாய்மொழியில் (1—9—8) * நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம் ஆவியுமாக்கையுந் தானே * என்பது ஆழ்வார் பாசுரம். இங்கு வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் வருமாறு ;—

"ஆவியென்று ஆத்மா; ஆக்கையென்று சரீரம். அர்த்தத்தையும் சப்தத்தையும் சொல்லுகிறது. ஆக, சப்தார்த்த ஸம்பந்த நியமம் அவனிட்டவழக் கென்கிறது"— என்று. சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் ஸம்பந்தம் நியதமென்றும், இந்த நையத்யம் ஈச்வர ஸங்கல்பாதீன மென்றும் சொல்லிற்றாயிற்று. ஆக வாச்யவாசகங்கள் இணைபிரியாதிருப்பனவேயன்றி ஒன்றை விட்டொன்று பிரிந்திருக்குமதன்று என்று திடமாகத் தெரிவிக்கப் பட்டதாயிற்று.

இனி, வாசகம் ஓரிடத்திலும் வாச்யம் மற்றோரிடத்திலுமிருப்பதாக ப்ராமாணிகர்கள் பேசினால், அது "என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார்" "என்னையுமறந்து தன்னையு மறந்ததே" * नपुंसकमिति ज्ञात्वा तां प्रति प्रेषितं मनः। तत्तु तत्रैव रमते हताः पाणिनिना वयम् ॥ * இத்யாதிகள் போலே சாடுக்தியாக எண்ணத்தக்கதே யன்றி வேறல்ல. பெரிய திருவந்தாதியில் (50) "பிரிந்தொன்று நோக்காது தம்முடைய பின்னே, திரிந்துழலும் சிந்தனையார் தம்மை, புரிந்தொருகால், ஆவாவென இரங்கார் அந்தோ வலிதே கொல், மாவாய் பிளந்தார் மனம்" என்கிற பாசுரத்தை நோக்குமின். ஆழ்வாருடைய நெஞ்சானது அவர் தம்மைப் பிரிந்து எம்பெருமான் பின்னே திரிந்துழல்கின்றதாம். அதற்கு எம்பெருமான் இரங்கியருளவில்லையாம்; அப்பெருமானுடைய நெஞ்சு கல்நெஞ்சாம். பாசுரம் முழுவதும் இவ்வளவே விஷயம். இதனுடைய மருமமான தாற்பரியத்தைக் கண்டறியவேண்டியது ரஸிக விவேகிகளின் கடமை.

இவ்வண்ணமாகவேதான் "வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம்; அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்றுதவும்" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியின் தாற்பரியத்தையும் உய்த்துணர வேணும். ஆழ்வாருடைய நெஞ்சானது எப்படி ஆழ்வாரை விட்டுப் பிரியவே யில்லையோ, பிரியவும் மாட்டாதோ, அப்படியே வாச்யனான எம்பெருமான் வாசகமான திருநாமத்தை விட்டுப் பிரிந்திலன், பிரியகில்லான்— என்று திண்ணமாக எண்ணவேணும்.

"अन्तर्गृहे कृष्णमवेक्ष्य चोरं बध्वा कवाटं जननी गतैका।
उलूखले दामनि बद्धमेनं तत्रापि दृष्ट्वा स्तिमिता बभूव ॥"

என்கிற சுலோகத்தையும், "உன்னைக்களவில் உரலோடு கட்டிவைத்துன்னுடைய, அன்னைக் கொருத்தி யறிவித்தபோது அலையாழி மங்கை, தன்னைப் புணர்ந்தருள் தாரரங்கா! அவள் தன் மருங்கில், பின்னைக் கொடு சென்ற பிள்ளை மற்றாரென்று பேசுகவே." [திருவரங்கத்து மாலை. 50.] என்ற பிள்ளைப் பெருமாள் பாசுரத்தையுமறிவார் வாச்யன் வாசகத்தை விட்டிருந்தானென்று கனவிலும் நினைக்கப் பெறார். வாசகம் கிட்டி நின்ற போது வாச்யனும் உடனிருந்தானத்தனை போக்கி விலகியிருந்தானென்று அந்தரங்க ஸாக்ஷிகமாகத் திருவுள்ளம் பற்றுபவரல்லர் பிள்ளை யுலகாசிரியர். "அவன் தூரஸ்தனானாலும்" என்ற ஸ்ரீஸூக்தி பின்னை அபத்தமா? என்று கேட்பவர்கள் "தம்முடைய பின்னே திரிந்துழலும் சிந்தனையார்" என்ற நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியைக் கொண்டு ஸமாதானம் பெறுக.

ப்ரபாவத்ப்ரபாவம் போலன்று ப்ரபாப்ரபாவம்; ப்ரபாவான் ஆகாசஸ்தனா யிருந்தாலும் ப்ரபை நம்முடைய க்ருஹாங்கணத்திலேயிருந்து வெளிச்சந்தரும்." "புஷ்பப்ரபாவம் போலன்று பரிமள ப்ரபாவம்; புஷ்பம் பரோக்ஷமாயிருந்தாலும் பரிமளம் ப்ரத்யக்ஷமாயிருந்து கமழும்." "ப்ரபத்தவ்யன் ப்ரபாவம் போலன்று ப்ரபத்தியின் ப்ரபாவம் அவன் கண்ணுக்குத் தோற்றாதபடி நின்றாலும் இது கரஸ்தமாயிருந்து கார்யம் செய்யும்" "த்யேயன் ப்ரபாவம் போலன்று த்யாநத்தின் ப்ரபாவம்; அவன் சிந்தைக்கும் கோசரமல்லனாயிருந்தாலும் இது கைப்பட நின்று காரியம் செய்யும்." "ஸ்துத்யன் ப்ரபாவம் போலன்று ஸ்துதியின் ப்ரபாவம்; அவன் வாசாமகோசரனா யிருந்தாலும் இது நாவினுள் நின்று மலர்ந்து காரியம் செய்யும்." "நமஸ்கார்யன் ப்ரபாவம் போலன்று நமஸ்காரத்தின் ப்ரபாவம்; அவன் கை

விட்டாலும் இது கைவிடாது." "பிஷக்கின் பிரபாவம் போலன்று பேஷஜத்தின் ப்ரபாவம்; அவன் வாராதே யிருந்தாலும் இது வந்து காரியம் செய்யும்," என்றிங்ஙனே எத்தனை வாக்கியங்கள் சொன்னாலும் ப்ரபாவானை விட்டு ப்ரபைக்கும், புஷ்பத்தை விட்டுப் பரிமளத்திற்கும், ப்ரபத்தவ்யனை விட்டு ப்ரபத்திக்கும், த்யேயனை விட்டு த்யாநத்திற்கும், ஸ்துத்யனை விட்டு ஸ்துதிக்கும், நமஸ்கார்யனை விட்டு நமஸ்காரத்திற்கும், பிஷக்கை விட்டு பேஷஜத்திற்கும் தனியே ஒரு ப்ரபாவம் தேறாது; ஏதோவொரு விவக்ஷா விசேஷத்தாலே ஆரோபமத்தனையே. இவ்வண்ணமாகவே "வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவ" மென்ற விடத்திற்கும் நிர்வாஹம். மற்றுமுள்ள விஷயங்களெல்லாம் மேலே ஸர்வஸ்வத்தில் ஸுவிசதமாக வுணரத்தக்கன.

---

# ஸம்ரக்ஷண ஸமீக்ஷணம்.

[ ப்ர. அ. ]

1 இதுவரையிற் போலவே இனியும் ஸௌஜந்ய பங்கம் நேர வேண்டா; நேரிடாது. "सर्वथा सुकरं मैत्री दुष्करं परिपालनम् ।... प्रीतिरल्पेपि भिद्यते." என்றதை நோக்கி அஞ்சவேண்டியதுண்டு.

2. "இரண்டு ஸ்வாமிகளுடைய நிர்வாஹங்களையும் ஓரளவு ஏற்றுக் கொள்வதாயும் ஓரளவு தள்ளுவதாயும் அமைந்தது" என்றவிடத்திற்கு இஃது அறியத்தக்கது. விபீஷண பரிக்ரஹப்ரகரணத்தில் ஸுக்ரீவாதிகளின் அபிப்ராயம் ஒருவகையாகவும் திருவடியின் கருத்து மற்றொரு வகையாகவும் இருக்க, அந்த நிலையில் "மமாபி து விவக்ஷாஸ்தி காசித் ப்ரதி விபீஷணம்" என்று தொடங்கின பெருமாள் மூன்றுவதான வொரு விலக்ஷணமான ஸ்வாபிப்ராயத்தை வெளியிட்டருளினதாக அபயப்ரதாநஸாரத்தில் வேதாந்த வாசிரியர் வெளியிட்டுள்ளார். அங்ஙனே யிருந்தால் உலகமெல்லா முகந்து கொண்டாட நிற்கும். அந்த பாக்கியமில்லாமைக்கு வருந்த வேண்டியதே. "न खलु चन्द्रादन्यत्र अमृतं प्रतीक्षणीयं भवेत् ॥" அது நிற்க. "திருநாம ஸங்கீர்த்தனத்தாலோ புருஷகார மின்மையாலோ த்ரௌபதி ப்ரபத்தி அடியோடு பலிக்காமற் போய்விட்டது" என்னுங் கொள்கையுடையார் யாவஜ்ஜீவம் (அல்லது) யாவதாத்மபாவி அக்கொள்கையுடனே வாழ்ந்திடுக. நமக்கு தனிச்லோக ஸ்ரீகோசம் வந்ததும் அதைப்பற்றி நாம் புகழ்ந்து எழுதியதும் வாஸ்தவம். ஸர்வாத்மநா ஸத்யம். அந்த ஸ்ரீகோசம் 690 பக்கங்கள் கொண்ட ப்ருஹத்தான புஸ்தகம். அத்தனையும் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தியே யென்றும், வேறு கல்மஷம் அதில் கலசியிராதென்றும் திடமான நம்பிக்கை கொண்டிருந்த நாம் அதை ப்ரசம்ஸித்து எழுத நேர்ந்தது. உள்ளே விஷமிருப்பதை எப்போது கவனிக்க நேர்ந்ததோ அப்போதே அதைப் பரிஹரிக்க நாம் ப்ரவர்த்தித்தோம். விஷம் விஷமே யென்பதில் ஸந்தேஹகந்தமுமில்லை. நம்முடைய ப்ரசம்ஸை யெல்லாம் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி ராசிக்கு மட்டுமேயாம். புத்தகம் கிடைத்தவுடனே பூர்த்தியாகப் பார்த்துவிட முடியுமோ? இக்காலத்தில் பூர்வாசார்ய திவ்ய க்ரந்தங்கள் பல கிடைப்பதில்லை. சென்னையில் கராலபாடி. ஆழ்வாரய்யா என்பவர் மிகப் பெரிய முயற்சிகள் செய்து பல க்ரந்தங்களை வெளியிட்டு அந்த வெளியீடு ஆசந்த்ரார்க்கம் நடைபெற்று வரும்படியான நிபந்தனைகள் செய்திருந்தும் பழுதேயாயிற்று. இப்போது ஸ்ரீஸூக்தி ப்ரகாசந கைங்கரியம் நடைபெற்று வருவதைப் பற்றி நமக்குண்டான மகிழ்ச்சி அளவிடற்பாலதன்று. அந்த மகிழ்ச்சியை நாம் ஒளியாது உபந்யாஸ ஸபைகளில் வெளியிட்டு வருவதுண்டு. இனியும் தளராது ஸமய விசேஷங்களில் வெளியிட்டே வரு

வோம். திருக்குருகைப் பிரான் பிள்ளான் பணிக்கும் படியாக ஸ்ரீவசநபூஷணத்தில் உதா ஹரிக்கப்பட்டுள்ள "மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தஸலிலம் போலே" என்கிற ஸ்ரீஸூக்தியை நினைப்பூட்ட வல்ல விஷஸம்பர்க்கம் கண்டால் க்ஷணகால மும் ஸஹித்திரோ மென்பதை உலகமறியும்.

3. இதைப்பற்றி யெழுதவேண்டியதொன்றுமில்லை.

4. ஸித்தாஞ்ஜனத்தில் தூஷண லேசமுமில்லையாகவும், ஸர்வஸ்வத்தில்— குரு முக மாகக் கேளாதவனென்றும் பிராமாணிகார்த்தங்களை மாறுபடுத்தாமல் ஆர்ஜவத்துடன் எழுதுபவனல்லனென்றும் ... இத்யாதி தூஷண வாக்யங்கள் எழுதப்பட்டிருப்பதாகவும் தெரிவிக்கப் படுகிறது. பரமபவித்திரமான ஸ்ரீபாஷ்யத்தில் மஹாஸித்தாந்தத்தின் உப க்ரமத்தில்,

"तदिदम् औपनिषद परमपुरुषवरणीयताहेतुगुणविशेषविरहिणाम् अनादिपापवासनादूषिताशेष शेमुषीकाणाम् अनधिगतपदवाक्यस्वरूपतदर्थयाथात्म्य प्रत्यक्षादि सकलप्रमाणवृत्ततदितिकर्तव्यतारूप-समीचीनन्यायमार्गाणाम् विकल्पासहविविधकुतर्ककल्ककल्पितमिति ।"

என்கிற ஸ்ரீஸூக்திகளை அத்யயனம் செய்து வருகிறோம். பரமபவித்திரமான அந்த மஹா க்ரந்தத்தில் இத்தகைய தூஷணோக்திகள் ஆவச்யகமா? என்று கேட்டால், ஸ்வாமி பாஷ்ய காரர் "என்னெஞ்சினால் நோக்கிக் காணீர்" என்றொழிய வேறொன்று மருளிச் செய்யார். எதிர்த்தலையில் தோன்றும் அபார்த்தங்கள் படுத்துகிற பாடு அது.

5. "மஹா வித்வான்களும் பொருளுணரத் தடுமாறும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக் குப் பொருளெழுதும் போது அல்பஜ்ஞனான அடியேன் சில பிழைகளைச் செய்வது ஸம்பா விதமே யொழிய அஸம்பாவிதமன்று" என்பது ஹ்ருதயபூர்வகமாக இருக்கவேணும். "குற்றங் குறைகளிருந்தால் திருத்திப் பணிகொள்ளவேணும்" என்று உலகில் எழுதா தாரில்லை. குற்றங்குறைகளைக் காட்டும் போது கண் சிவப்பாரே மலிந்துள்ளார். வாயைக் கையைத் திறக்க முடியாத விடத்தில் கை கூப்பி நிற்பது குண விசேஷமாகாது.

6. நான்முகன் திருவந்தாதி. (பா. 46.) *வைப்பன் மணி விளக்கா* என்னும் பாசுரத் திற்கு நம்முடைய திவ்யார்த்ததீபிகையில் சுவையற்றதொரு பொருளை நாம் எழுதியிருப்பதா கவும், சுவைமிக்க பொருளைத் தாம் காட்டியிருப்பதாகவும், ஏற்கெனவே திருத்திக்கொள்ள வில்லையானால் தீபிகை யுரையின் அடுத்த பதிப்பில் பொருளைத் திருத்திக் கொள்ளவேண்டு மென்று வேண்டிக் கொள்வதாகவும் எழுதப்பட்டுள்ளது. பல நூற்றுக் கணக்கான நம்மு டைய நூல்களில் திருத்திக் கொள்ளவேண்டிய விஷயங்கள் சிலவோ பலவோ இருக்குமாகு லும் அச்சுப்பிழைகளைத் திருத்திக் கொள்ளத் தெரிவிக்க வல்லாருளரே யன்றி, பொருட் பிழைகளைத் திருத்திக் கொள்ளத் தெரிவிக்க வல்லார் இக்காலத்திலில்லை யென்பது நமது துணிபு. எடுத்துக் காட்டியுள்ள விடத்தில் (*வைப்பன் மணிவிளக்கா பாசுரத்தின் பின் னடியில்) "எப்பாடும் வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே" என்றவிடத் துப் பொருளைப் பற்றிதானே விசாரம். இதற்கு ஆர அமரச் சொல்லுகிறோம். அருளிச் செயல்களில் மலைகளைப் பற்றிப் பேசுமிடங்களில் பொருள் வேற்றுமை பூருவாசாரியர்களின் காலத்திலிருந்து விளைந்திருக்கின்றது. பெரிய திருமொழியில் (1—2—10) *கரியமாமுகிற் படலங்கள் கிடந்து அவை முழங்கிடக் களிறென்று பெரியமாசுணம் வரையெனப் பெயர்தரு பிரிதியெம்பெருமானை* என்ற விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் உள்ள ஐதிஹ்ய ஸ்ரீஸூக்திகள் காண்மின்—

(வரையெனப் பெயர்தரு) அம்மலைப் பாம்புகளானவை அவற்றுக்கஞ்சி மலைபோலே பேர்ந்து போய் புற்றிலே புகாநிற்கு மென்று; "காருடைய மின்னென்று புற்றடை யும்" என்றும், "பரந்த தலையுடைய நாகம் வாரணத்தை யஞ்சி யொளிக்கும்" என்கிற

ப்ரஸித்தியாலும், இப்படி "புற்றிலே யடையும்" என்றருளிச் செய்வர் ஜீயர். "இதுவோ இதுக்கருளிச் செய்யும்படி?" என்று பிள்ளை கேட்டருள; "நீரிப்படி கேட்கும்போது ஒன்றை நினைத்தல்லது கேளீர், அத்தைச் சொல்லும்" என்ன; "பெயருகையாகிறதுதான் போக்குவரத்து இரண்டுக்கும் ஸாதாரணமாயாயிற்றிருப்பது; இனித்தான் மலைக்குச் சிறப்புச் சொல்லுமவர்கள் 'மலைப்பாம்புகள் ஆனையை விழுங்கும்' என்னக் கடவர்கள்; ஆகையாலே, கரியமா முகில் படலங்கள் கிடந்து முழங்குகிறவற்றைப் பெரிய மாசுணமானது ஆனையாகப் புத்தி பண்ணி ஆமிஷார்த்தமாக மலை பேர்ந்தாற் போலே கால் வாங்கி வந்து கிட்டாநிற்கு மாயிற்று என்றுமே" என்ன; "அதுவேயிறே பொருள்" என்று போரக் கொண்டாடியருளினார் என்றருளிச் செய்வர்.

என்பன பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகள். இங்கே நம்முடைய திவ்யார்த்ததீபிகையில் விரிவான விவரணம் காணத்தக்கது. (அது வேண்டா.) நஞ்சீயர் ஒரு பொருளுரைக்க, அதைக் கேட்ட நம்பிள்ளை தாம் வேறொரு பொருள் அருளிச் செய்ததாகவும், நஞ்சீயர் அதைக் கேட்டருளிப் போரவுகந்து கொண்டாடினதாகவும் வியாக்யானத்திலுள்ளது. நஞ்சீயர் ஸர்வாத்மநா அஸங்கதமான பொருளை அருளிச் செய்துவிடவில்லை. மாசுணம் களிற்றைக் கண்டு அஞ்சியொளிப்பதும் தமிழர் பாடல்களிலே ஏறியேயிருக்கின்றது.

நம்பிள்ளை யருளிச்செய்த பொருள் சீரியதாயிருந்தாலும் நஞ்சீயரைப் பற்றின ப்ரஸ்தாவமே செய்யாமல் நம்பிள்ளை ஸாதித்த பொருளை மட்டுமே இங்குப் பெரியவாச்சான் பிள்ளை யெழுதியிருக்கலாம். அப்படியிருக்க, நஞ்சீயர் ஒரு பொருள் ஸாதித்ததாகவும் நம்பிள்ளை வேறொரு பொருள் ஸாதித்ததாகவும் அதைக் கேட்டு நஞ்சீயர் உகந்ததாகவும் காட்டி வியாக்யானித்திருப்பது எதற்காக வென்று பார்க்கவேணும். இருவகைப் பொருளும் ஆதரிக்கத் தக்கதே யென்று காட்டுதற்கேயாம். நான்முகன் திருவந்தாதியிலேயே (39) *யானை வெருவியரவொடுங்கும் வெற்பு* என்றவிடத்திற்கு இருவகையான அர்த்த யோஜநைகள் காட்டப்பட்டிருக்கின்றன. "எப்பாடும் வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும்" என்றவிடத்திற்கு— குறவர் வில்லெடுப்பது யானையை வளைத்துக் கொண்ட வேடர்மீது எய்யவா? யானையின்மீது எய்யவா? என்பது விசாரம். உரைகாரர் வேடர்மீது எய்ய வென்று காட்டியிருந்தாலும் பெரியவாச்சான்பிள்ளை ஸ்பஷ்டமாக வொன்றுங் காட்டிற்றிலர். "எப்போதும் கை நீட்டினபடியே அங்யபரமாய் நிற்கிற யானையைப் புறம்புள்ள வேடர் சூழ, திருமலையிலே வர்த்திக்கும் குறவர் வில்லெடுத்தபடியே நிற்கும் திருமலையே" என்பது பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி. இங்கு அச்சுப்பதிப்பில் "வில்லெடுத்தபடி யெதிர்க்கும்" என்று காணப்படுகிறது. இங்ஙனே பாடமிருந்தால் 'வில்லெடுத்து எதிர்க்கும்' என்றிருக்க வேணுமே யல்லது வில்லெடுத்தபடி யென்றிருக்க ஔசித்யமில்லை. வியாக்யான பங்க்திகள் எங்கும் இவ்வண்ணம் அமைவதில்லை. 'வில்லெடுத்தபடியே நிற்கும்' என்றிருந்த ஸ்ரீஸூக்தி 'வில்லெடுத்தபடி யெதிர்க்கும்' என்று மாறிவிட்டதென்று அஸ்மதாசார்யர் அருளியபடி. இதைப் பற்றின விசாரவிரிவு அநபேக்ஷிதம். இப்பாட்டில் திருமலை சந்திரமண்டலத்தில் அளாவியதென்று ஒக்கமுரைப்பதே முக்கியமாக விவக்ஷிதம். அது முன்னடிகளிலாயிற்று. பின்னடியின் பொருளில் யாதொரு நிர்ப்பந்தமுமில்லை. பரதாழ்வான்மீது குஹப் பெருமாள் அதிசங்கை பண்ண, அவனோடும் நில்லாமல் பரத்வாஜ மஹர்ஷியும் அதிசங்கை பண்ணினாப் போலே, திருமலையப்பன் பக்கலிலே அன்புள்ளவொரு களிற்றிற்கு வேடரும் குறவரும் தீங்கு செய்ய நினைத்ததாகக் கூறும் பொருள் ஒரு விதத்திலும் சுவையற்றதன்று. இந்த விசாரம் ப்ரக்ருதத்திற்கு ஸர்வாத்மநா அநுபயுக்தமென்று தாமே முடித்திருப்பதால் இதைப்பற்றித் தனியே விமர்சிப்போம்.

இங்கு முக்கியமாகத் தெரிவிக்க வேண்டிற்றொன்றுண்டு. நாம் இயற்பாவுக்கு திவ்யார்த்த தீபிகை யுரை யெழுதி வெளியிட்டது 1929 சுக்கில வருஷத்தில். இற்றைக்கு

*முப்பத்துநான்கு வருடங்களாயின. அப்போது நான்முகன் திருவந்தாதிக்கு உரையெழுதி முடித்த வுடனே "உரைகாரர் விண்ணப்பம்" என மகுடமிட்டு எழுதிப் பிரசுரஞ் செய்திருப்பது முதற் பதிப்பில் மட்டுமே யுள்ளது. அதனை உலகம் காணவேண்டியது அவசியமென்று ஈண்டெடுத்து வெளியிடுகின்றேன்.*

"முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரானு மருளிச்செய்த திருவந்தாதிப் பிரபந்தங்கள் நான்குக்கும் ஒருவாறு உரையெழுதி முடிக்கப்பட்டது. திவ்யப்ரபந்தங்கட்கெல்லாம் எஞ்சாமை வியாக்கியான மருளிய பெரியவாச்சான் பிள்ளை இயற்பா வியாக்கியானத்தை மிகவும் சுருக்கியருளினர். அதுதன்னிலும், திருவந்தாதிகளின் வியாக்கியானம் மிக்க சுருக்கம்.

பெரியவாச்சான்பிள்ளை மற்ற மூவாயிரங்கட்கும் வியாக்கியான மருளிச் செய்தபின் இயற்பாவுக்கு அருளிச்செய்யத் தொடங்கினரென்றும், அப்போது அசக்தியின் மிகையினால் தாம் ஸாரமாகச் சுருக்கியருளிச் செய்ததை அந்தரங்க சிஷ்யரொருவர் பட்டோலை கொண்டருளினரென்றும் பெரியோர் பகரக் கேட்டிருக்கை. ஆகவே, அதிஸங்க்ரஹமான அந்த வியாக்கியானத்தைக் கொண்டு திருவந்தாதிகளின் பொருளையும் கருத்தையும் கண்டறிதல் அடியேனைப் போன்ற மந்த மதிகளுக்குக் கஷ்டஸாத்யமேயாகும். அந்த வியாக்கியானம் ஸங்க்ரஹமாயினும் நுண்ணறிவினர்க்கு அது கண்ணுடி போன்றிருக்கும். நுண்ணறிவினர்தாமும் மிகப் பிரயாஸப்பட்டு ஆழ்ந்து நோக்கி ஆராய்ந்தே அந்த வியாக்கியானத்தினின்று அரும்பெரும் பொருள்களைக் கண்டறிய வல்லராவர்.

ஸ்ரீமணவாளமாமுனிகளின் திருவடிகளுள் ஒருவரான அப்பிள்ளை யென்பவர் இத்திருவந்தாதி கட்கு ஓர் உரை இட்டருளி யிருப்பதும் ஸங்க்ரஹமே. பல ஆண்டுகட்கு முன்னர் அவ்வுரையைத் தெலுங்கு லிபியில் பதிப்பித்திருக்கின்றனர். பதிப்பித்தவர்கள் அவ்வுரையை மிகவும் ரஸாபாஸப் படுத்திவிட்டனர். எங்ஙனே யென்னில்; பதமும் உரையுமாகப் பதிப்பித்திருக்கிறார்கள். ஆனால் அப்பிள்ளையருளிச் செய்தது பதவுரையாக அல்ல. பதங்களையும் அந்வயக்ரமங்களையும் திருவுள்ளத்திற் கொண்டு பொருளைமாத்திரம் நெடுக அருளிச் செய்திருந்தனர். இதனை அச்சிடுவிக்குமவர்கள் படிப்பவர்கட்கு ஸௌகரியமுண்டாக்கக் கருதிப் பதமும் உரையுமாகப் பதிப்பித்தனர். அங்ஙனே பதிப்பிக்கும்போது தங்களுடைய ஸ்வாதந்திரியத்தையே அதிகமாக மேற்கொண்டு வ்யாக்க்யாதாவின் திருவுள்ளத்திற்கு விருத்தமாகப் பதங்களைப் பிரித்தும் அந்வயங்கள் காட்டியும் சுவைக் கேடாக்கினர்.

அடியேன் பல ஆண்டுகட்கு முன்பு, மேற்குறித்த இரண்டு வியாக்கியானங்களையும் ஏட்டுப் பிரதிகளைக் கொண்டு பரிசோதிக்கத் தொடங்கினதில், அச்சுப்பிரதிகளில் ப்ரக்ஷேப உத்க்ஷேபங்கள் மிகவாகக் காணப்பட்டன. பல பாசுரங்கட்குப் பொருளும் கருத்தும் புலப்படவும் பெற்றிலேன். இப்படியிருக்கையில், திவ்யார்த்த தீபிகை யென்னும் பெயரால் முதலாயிரவுரையை அடியேனெழுதி வெளியிடப்புக்கதையறிந்த ஸ்ரீமத். உ. வே. வித்வான் திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமிகள் 'இயற்பாவுக்கு உரையிட்டால் லோகோபகாரமாகும்; மற்ற திவ்யப்ரபந்தங்கட்கு உரை பிறகு வெளிவரலாம்; திருவந்தாதிகளின் பொருளுங் கருத்துமுணர்வது மிகப் பரிச்ரமமாயிருக்கின்றது' என்று சோதிவாய் திறந்து நியமித்தருளினர். ஆயினும் அப்போது இயற்பாவில் கைவைக்க அடியேனுக்குச் சிறிதும் துணிவு பிறக்கவில்லை, இப்போது ஒருவாறு உரையெழுதி வெளியிடலாயினேன்.

ஆசாரியர்கள் திருவடிகளில் குனிந்து கேட்டவற்றையே கைம் முதலாகக் கொண்டு பெரியவாச்சான் பிள்ளையின் ஆழ்ந்த திருவுள்ளத்தைக் கூடுமானவரை கண்டறிந்து பெரியார்க்கும் சிறியார்க்கும் ஒருங்கே பயன்படுமாறு இவ்வுரை வரையப்பட்டது. சிலவிடங்களில் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானப்படி பொருளுரைத்தால் அதனை மந்தமதிகள் க்ரஹித்துக் கொள்வது அருமைப்படுமென்றெண்ணி ஸுலபமான வேறு வகையில் பொருளுரைத்துள்ளேன். அப்படிப்பட்ட இடங்கள் மிகவும் ஸ்வல்பங்களேயாம். மற்றும் சிலவிடங்களில் பெரியவாச்சான் பிள்ளையின் ஆழ்ந்த திருவுள்ளம் அடியேனுக்கு எட்டாமையாலும் பல பெரியோர்களை அடிபணிந்து கேட்டு

முணரப் பெருமையாலும் ஆங்கும் ஸ்வதந்த்ரமாக எழுதியுள்ளேன், இவற்றைக் குறையாகவே னும் குற்றமாகவேனும் பெரியோர் கருதலாகாது. பூருவாசாரியர்களின் திருவுள்ளத்தையே சேம வைப்பாகக் கொள்பவனடியேன்.

இவ்வுரையில் திருத்தங்கள் செய்ய வேண்டியவற்றை அறிவிற் சிறந்த அன்பர் அறிவித்தருள் வரேல் * தலையல்லாற் கைம்மாறிலேன். மறுபதிப்பில் திருத்தவும் பெறும்."

இந்த விண்ணப்பத்தை இங்கு வெளியிட்டது, இயற்பா வியாக்கியான விஷயத்தில் முப்பத்தைந்து ஆண்டுகட்கு முன்னமே நாம் தெரிவித்திருக்குமதை உலகம் அறிய வேண்டு மென்பதற்காகவே. பகவத் ராமாநுஜ திவ்ய ஸூக்திகளிலும் ஸ்ரீ லோகாசார்ய ஸ்ரீ வரவர முநீந்த்ராதி திவ்ய ஸூக்திகளிலும் அவத்யங்களிருப்பதாகக் கருதுமவர்கள் அவற்றிலிருந்து சில பலவற்றை யெடுத்துக் காட்டி பாமர ப்ரதாரணம் பண்ணுவது போல இவர்களும் செய்து "இதிலிருந்து ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியும் பிழைகளுக்கு அப்பாற்பட்டவரல்லரென விளங்குகிறது" என்றெழுதி த்ருப்தியடைவதைத் தடுப்பாரில்லை. இதனால் தங்களுடைய பிழை ஊர்ஜிதமாவது தவிர வேறொன்றும் தேறாது.

8. விஷய விசாரங்களில் இன்னவை ஸம்பந்தப் பட்டவை, இன்னவை ஸம்பந்தப் படாதவை என்னும் பாகுபாடு காண்பதரிது. எந்த க்ரந்தத்திலும் ப்ரஸக்தத்தோடு அநு ப்ரஸக்தமும் அவர்ஜநீயமே யாகின்றது. மேலே 13. லக்கமிட்டு முமுக்ஷுப்படி ஸூத்ரார் த்தமென மகுடமிட்டு இவர்களெழுதி வருகையில் "திருநாமமே பலகரணமாய் நின்று உத விற்றென்று கொண்டாலொழிய முமுக்ஷுப்படி ஸூத்ரங்களும் முன்னெடுத்த ஈட்டு ஸ்ரீ ஸூக்தியும் பொருளற்றவையாய் முடியும்" என்றெழுதப் பட்டுள்ளது. இந்த வாக்யத் தில் விவக்ஷிதமான அர்த்தம் மிகத் தவறு என்று கண்டிக்க வேண்டியது ஒரு புறமிருக்க, இந்த சப்த ஸந்தர்ப்பமே மிகத் தவறு என்று மறுக்க வேண்டியதும் அவசியமாகின்றது. கேண்மின்; "கொண்டாலொழிய, செய்தாலொழிய, வந்தாலொழிய, போனாலொழிய, எழுதினாலொழிய, பேசினாலொழிய" இத்யாதி வார்த்தைகள் எழுதப் படுமிடங்களில் நிய மேந அடுத்த வார்த்தை வ்யதிரேகோக்தியாகவே யிருக்கும்; இருக்க வேண்டும். கொண் டாலொழியப் பொருளுள்ளவையாகா: செய்தாலொழியக் காரியமாகாது; நீ வந்தாலொழிய நான் வர மாட்டேன்; அவன் போனாலொழிய அக்காரியமாகாது; எழுதினாலொழியப் பயன் படாது; பேசினாலொழிய த்ருப்தி யுண்டாகாது— என்றிங்ஙனேதான் வாக்ய ஸந்நிவேச மிருந்து தீரும். வடமொழியிலும் இப்படியேதான்.

* तदहं त्वदृते न नाथवान् मदृते त्वं दयनीयवान् न च * नहि पालनसामर्थ्यमृते सर्वेश्वरं हरिम् * न संपदां समाहारे विपदां विनिवर्तने । समर्थो दृश्यते कश्चित्तं विना पुरुषोत्तमम् ॥ * तेन विना तृणाग्रमपि न चलति *

இத்யாதி பரச்சதம் காணலாம். இந்த ரீதியில் "திருநாமமே உதவிற்றென்று கொண்டா லொழிய ஸ்ரீஸூக்திகள் பொருந்தமாட்டா (அல்லது) பொருளுள்ளவையாகமாட்டா" என்றிருந்தாலொழிய வாக்யம் சேராது. சேருமென்று ஸ்தாபிக்க த்ரிமூர்த்திகளும் சேர்ந்து வந்தாலுமாகாது. "பொருளற்றவையாய் முடியம்" என்றே முடிபு இருக்க வேண்டுமாகில், முன்னே "கொண்டாலொழிய" என்பதை "கொள்ளாவிடில்" என்று திருத்தியாக வேண் டும். இத்தகைய நிரூபணங்கள் விவாத விஷயங்களுக்கு ஸம்பந்தப்பட்டவை யல்லவாகி லும் விட்டுத் தொலைக்கத் தக்கவையல்ல. ஆனால் மணற்சோற்றிலே கல் ஆராய்வது விவே கிகளின் பணியன்று.

9. இவர்கள் பரிகல்பனை செய்யும் நிபந்தனைகளை இவர்கள் பரிபாலனம் செய்துவருக. அறுபது ஆண்டுகட்கு மேலாக நூல்களை யெழுதி நாற்றிசைகளிலும் பரப்பி வருகின்ற நாம்

புதிதாக ஒரு நிபந்தனையையும் தெரிந்து கொள்ளவேண்டா. சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லவேண்டிய கடமை யில்லை நமக்கு. ஒரே விஷயத்தில் ஓயாமல் நூல்களெழுதிக் கொண்டிருந்தாலும் அபூர்வமான பல விஷயங்கள் மிடைதருமென்பதற்கு இந்த ஸர்வஸ்வ நூலே சான்றாகும்.

10. [பொருளற்ற சில லக்கங்களை விட்டிடுகிறோம்.]

11. என்னுடைய பக்ஷமென்று ஒன்று கிடையாது. பிள்ளை லோகாசாரியருடையவும் மணவாளமாமுனிகளினுடையவும் திருவுள்ளமே நாமெடுத்துக் காட்டியதும் காட்டுவதும். அதில் ஒரு அஸ்வாரஸ்யமும் ஏறிடவு மியலாது. "ப்ரபத்தி முதலில் தடைபட்ட போதிலும் பிறகு பலனளித்ததாக நாம் கொள்ளுகிறோம்" என்றது ஸர்வாத்மநா அஸங்கதம். த்ரௌபதி வஸ்த்ரத்திற்காகத் தான் பிரபத்தி பண்ணினாளென்பது ஸ்ரீவசனபூஷண ஸித்தம். உடனே வஸ்த்ர வ்ருத்தியாயிற்றென்று மஹாபாரத ஸித்தம்; த்ரிஜகத் ப்ரஸித்தம். ஆகவே ப்ரபத்தி முதலில் தடைபட்டதென்று வாய்திறக்கவே வழியில்லை. "இதை ஒப்புக் கொண்டுமிருக்கிறார்" என்றது விப்ரலம்பம். இதரர்களின் கொள்கைகளையும் கண்டிக்க நாம் நூலெழுதுவதாகக் காட்டியிருப்பதைத் தடஸ்தர்கள் காணவேணும்.

12. மறுவடிவெடுக்கு மென்ற ப்ரதிஜ்ஞை "ஆள் புக்ககாதல் அடிமைப் பயனன்றே" என்றாப் போலே அந்த க்ஷணத்திலேயே ஸபலமாகி யிருக்க "ப்ரதிஜ்ஞா மாத்ரமாகவே நிற்கு"மென்பது அபலாபம். "பிழையேயென்று ஒப்புக் கொள்ளுகிறோம்" என்னும் ப்ராமாணிகத்வம் ஸகல விஷயங்களிலு மொத்திருக்க ப்ராப்தம். எப்படியொத்திருக்கும்? திருக்குடந்தையிலே ஒரு பரம வைதிகர் இருந்தார். அவர் பித்ரு தீக்ஷையோ மாத்ரு தீக்ஷையோ வஹித்தார். தீக்ஷையிடையில் தேவியார் கருக் கொண்டு ஜாதாபௌசத்தினால் ஆப்திகம் தடைபட்டது அதற்கு நிஷ்க்ருதி செய்துகொள்ள விரும்பிப் பல வைதிகர்களையும் வரவழைத்துக் கூச்மாண்ட ஹோமம் செய்தாராம். அப்போது ஒரு வைதிகர் துணிந்து கேட்டாராம்— 'ஸ்வாமிந்! உம்முடைய அசாஸ்த்ரீய ப்ரவ்ருத்தி கர்ப்பரூபேண வெளிவந்து விடவேதானே இந்த நிஷ்க்ருதி செய்து கொண்டீர்; இந்த விதமாக வெளிவராமலிருந்தால் இந்த ஹோமம் அநுஷ்டித்திருப்பீரா?' என்றாராம். இதற்கு என்ன விடையிறுப்பது? தலைகுனிந்து நின்றாரத்தனை. स्मृतस्य उपेक्षानर्हत्वात् उपक्षिप्तमिहैतत् ॥ "பிழைகாட்டியவர்க்கும் இதிலும் வலிய பிழையுண்டென்பதைக் கீழே காட்டினோம்" என்றது க்ஷணபங்குரமாயிற்றே. அஸ்மாகூணும் இதி கதம்? என்று கேட்டால் "இக்ஷ்வாகூணாமிதி யதம் ததமேவ" என்று உடனே சொல்லிவிடுவாரில்லையா? *காருள்ளளவும் கடல்நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் அவத்யமெடுத்துரைக்கக் கொள்ள மாளாத விஷயங்கள் கிடைக்கும்படி நாம் பல நூற்றுக் கணக்கான நூல்களை யெழுதி வைத்திருக்கிறோம், எழுதிக்கொண்டு மிருக்கிறோம். அவத்யங்களெடுத்துக் காட்டுவதற்காகவாவது அவற்றை அல்லும் பகலு மனுபவித்தால் "ஏசினார் உய்ந்து போனார்," என்று திருமங்கையாழ்வார் ஸாதிக்கிற கட்டளையிலே ஸத்யமாய் உஜ்ஜீவிக்க விரகுண்டு.

13. நிரூபண நிபுணர்களான வித்வான்களாயிருந்து விரும்பி வாசிக்கும்படியாகப் பல ப்ரமாணங்களைப் புரஸ்கரித்து விஷயங்களை யெழுதினால் அவற்றை ஆராய்வதற்கு யாவர்க்கும் ருசியுண்டாகும். எந்த பக்கத்தைப் பார்த்தாலும், எந்த பங்க்தியைத் தொட்டாலும் "அவன் தூரஸ்தனானாலும் ...... புடவை சுரந்தது திருநாமமிறே" என்னுமிந்த ஸ்ரீஸூக்திகளைத் திருப்பித்திருப்பி யெழுதுவது தவிர வேறு ஒரு ப்ரமாண ப்ரதர்சனமோ உள்புக்க நிரூபணமோ உண்டாவென்று யாரும் பார்க்கலாம். எத்தனை லக்கங்கள் கொடுத்தும் எழுதிக் கொண்டு போகட்டுமே. அவற்றுக் கெல்லாம் பிரதி லக்கமிட்டு மறுப்பெழுத வேணுமென்று விதியா நமக்கு? ஒரு மஹா சூரன் "நான் நேற்றிரவு ஐந்நூறு போர்வீரர்களின் கால்களை வெட்டி விட்டேன்" என்றானாம்; "தலைகளை விட்டுக் கால்களை வெட்டக்

காரணமென்?" என்று சிலர் கேட்க, 'பத்துநாள் முன் தலைகளை வேறு சில சூரர்கள் வெட்டிப் போனார்கள்; கால்களே எனக்கு வெட்டக் கிடைத்தன' என்றானும். இங்ஙனே இவன் பெற்ற புகழ்தான் நாமும் இங்குப் பெறவேண்டியதாகும்; போதும் போதும்.

14. "பலப்ரதனும் பலகரணமும்" என மகுடமிட்டு எழுதப்படும் விஷயங்கள் தென்னாசார்ய ஸம்பிரதாயத்திற்குச் சால வைதேசிகங்கள். இங்கே ஸ்ரீபாஷ்ய ப்ரஸங்கம் பண்ணுவது மிகவும் சோசநீயம். "கரணம் காரணம் கர்த்தா" என்று ஸஹஸ்ரநாமத்திலுள்ளது கிடக்கட்டும். அது நமக்கு வேண்டா. வேதாந்த வாசிரியர் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலே (7) "देवः श्रीमान् स्वसिद्धेः करणमिति वदन् एकमर्थं सहस्रे" என்றும், (8) "स्वसिद्धेः स्वयमिह करणं श्रीधरः प्रत्यपादि" என்று மருளியிருப்பதை இவர்களறிய ப்ரஸக்தியில்லை. 'அந்த கரணத்வம் வேறு, இந்த கரணத்வம் வேறு' என்று இனி வாதமெழும். த்ரௌபதியிடத்திலே புஷ்கலமான ப்ரபத்தி தவிர வேறு எந்த உபாயாந்தரமுமில்லை யென்பதைப் பெரியவாச்சான் பிள்ளை முதலான ஸகல பூருவாசாரியர்களும் நிஷ்கர்ஷித்திருப்பது ஸர்வஸ்வத்திலே ஸுவ்யக்தம்.

15. फलम् என்கிற சொல்லுக்கு, கிடைத்த பலன் என்று அர்த்தமா? கருதிய பலன் என்று அர்த்தமா? என்கிற விசாரம் ஸர்வாத்மநா அஸமஞ்ஜஸம்; பலன் என்கிற சொல்லுக்கு ப்கரணாநுகுணமாகப் பொருள் தேறும். ஜ்யோதிஷ்டோமத்திற்குப் பலன் ஸ்வர்க்கம், ஔஷத ஸேவைக்குப் பலன் ஆரோக்யம்— என்றால் ஜ்யோதிஷ்டோமத்தினால் கிடைக்கக் கூடிய பலன், ஔஷத ஸேவையினால் கிடைக்கக் கூடிய பலன் என்று அர்த்தமாகும். பரதாழ்வானுடைய ப்ரபத்திக்குப் பலன் ராமாகமனம் என்றால் பரதன் கருதிய பலன் என்று அர்த்தமாகும். "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்றவிடத்திலே எவ்விதமான அர்த்தம் விவக்ஷித மென்பதை இன்று நாம் விசாரிக்க வேண்டாதபடி இதிஹாஸம் காட்டிப் போயிற்றே. த்ரௌபதி வஸ்த்ரத்திற்காக ப்ரபத்தி பண்ணினாளென்று ஸ்ரீவசனபூஷணம் காட்டியிருப்பதில் யாருக்கும் விவாதமில்லையே; அவள் அந்த ப்ரபத்தியினால் கோலின பலனை உடனே பெற்றாளா இல்லையா என்றால், பெறவில்லை யென்று வாய்திறக்க வழியில்லை. "ப்ரபத்தியினால் பெறவில்லை, நாமஸங்கீர்த்தனத்தினால் தான் பெற்றாள், ப்ரபத்தி பழுதாயொழிந்தது" என்று ஓராசாரியர் ஒரு மூலையில் ஒருவரி யெழுதி யிருந்தாலும் எடுத்துக் காட்டிவிட்டால் சாந்திச் சாந்திச் சாந்தி:. இங்கே வீணைக் காடுபாய்ந்த ப்ரஸங்கங்கள் உபேக்ஷிக்கத் தக்கவை. த்ரௌபதிக்கு மற்றும் பல கோரிக்கைகள் இருந்தாலிருக்கட்டுமே. அவை ஸ்ரீவசநபூஷணாருடமாக வில்லையே.

16. வாசா சரணம் என்று சொல்லி விடுவது மட்டுமே வாசிக ப்ரபத்தி யென்கிற வார்த்தை எந்த நூலிலும் நடையாடுமதன்று. "கமலநயந வாஸுதேவ விஷ்ணோ! தரணிதராச்யுத சங்கசக்ரபாணே!, பவ சரணமிதீரயந்தி யே வை" இத்யாதிகளுக்கும் சேராது. "சரணவரணவாகியம் யோதிதா" "சரணமித்யபி வாச முதைரிரம்" என்கிற ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் புரோவாதமல்ல; அநுவாதம். புரோவாதத்தில் பலபல நாமஸங்கீர்த்தனங்களை நன்கு காணலாம். "புடவை சுரந்தது திருநாமமிறே" என்கிற ஸ்ரீஸூக்தியின் ரஸாதிசயத்தை நாம் ஸஹஸ்ரமுகமாக மூதலித்தோம். விச்வகுணாதர்ச சம்புவில் (20)

"अवेमव्यापाराकलनमतुरीस्पर्शमचिरात् अनुन्मीलत्तन्तुप्रकरघटनायासमसकृत् । विषीदत्पाञ्चालीविपदपनयैकप्रणयिनः पटानां निर्माणं पतगपतिकेतोरवतु नः ॥" என்பது ஒரு சுலோகரத்னம். இங்கு "प्रणयतः पटानां निर्माता पतगपतिकेतुरस्तु शरणम्"

என்று சுலோகமியற்றினால் கூடாமை யில்லை. இங்ஙனே தான் வக்தவ்யமானது. ஆனால் இங்ஙனே சுலோகமிடாமல் 'எம்பெருமான் த்ரௌபதிக்காகச் செய்த அற்புதமான வஸ்த்ர

நிர்மாணம் நம்மைக் காத்திடுக' என்று சொன்னது பர்யாயோக்தத்தில் சேரும். இப்படிப் பட்ட ஸ்தலங்களில் சப்தலப்யமான அர்த்தத்தை விட்டு தாத்பர்ய ரூபேண வேறு அர்த்தந் தான் கொள்ளப்படும். சொல்லப்படும். வாச்ய ப்ரபாவமென்றும் வாசகப்ரபாவமென்றும் இரண்டாகப் பிரித்து அருளிச் செய்தது புத்த்யாரோஹார்த்தமத்தனை. शाखाग्रे चन्द्रः என்றால் கிளையின் நுனியில் சந்திரன் வந்துவிடுவானா?

ஸமீக்ஷணத்தை ஒருவாறு உபஸம்ஹரிப்போம்.

பொதுவாகவும் முக்கியமாகவும் யாவரு மொன்று அறியவேண்டியதுண்டு. பத்ரிகைகளில் விவாத ரூபமாகவோ சர்ச்சாரூபமாகவோ பிரசுரமாகும் விஷயங்களை யெல்லாம் எல்லாரும் வாசிக்கிறார்களென்றோ வாசித்துத் தெரிந்து கொள்ளுகிறார்களென்றோ நினைக்க முடியாது. சிலர் ஏடுகளைத் தள்ளிக் கொண்டே போய் முழுதும் பார்த்து விட்டதாகப் புத்தகத்தை மூடிவைப்பர்கள். சிலர் விஷயம் கடினமாயிருக்கின்றதென்னுங் காரணத்தினால் ஆழ்ந்து பார்க்க முடியாமல் மேலெழப் பார்த்து வைப்பர்கள். சிலர், அஸங்கதம், அஸம்பத்தம், சேராது, பொருந்தாது, விரோதிக்கும், விருத்தமாகும், ஒட்டாது, ஒட்டாமற் போய் விடும் ... இத்யாதிகளை மட்டும் உற்று நோக்கி 'நன்றாகத் தாக்கியிருக்கிறார்; நல்ல போடு போட்டிருக்கிறார்' என்று ஒரு தலையில் அபிமானத்திற்குச் சேரச் சொல்லிக் கொண்டிருப்பர்கள். புத்தகத்தை அடியோடு பிரித்துப் பாராமலே உள்ளே வைத்திடுபவர்கள் சிலரோ பலரோ வுளர் என்பது கிடக்கட்டும். வாதி சொல்லுவதென்ன? அதற்குப் பிரதிவாதி சொல்லுவதென்ன? வினாவுக்கு ஏற்ற விடை வந்திருக்கிறதா? என்று ஆழ்ந்து பார்த்து விஷயத்தை நெஞ்சில் நன்கு வாங்கிக்கொண்டு அஸாதுவான அர்த்தங்களை வெறுத்தும் மறுத்தும் தள்ளி ஸாதுவான அர்த்தங்களை மனமார ஏற்றுக் கொள்ள வல்லவர்கள் மிகச் சிலரேயாவர். ஆகவே நாம் விரிவாக விஷயங்களை யெழுதிக் கொண்டு போவதில் என்ன லாபம்? என்கிற விசாரம் இடையிடையே எழுகின்றது. ஆனாலும் வக்தவ்யார்த்தங்களை உபேக்ஷிக்க நியாயமில்லை. இதையொரு வியாஜமாகக் கொண்டு நம்முடைய ஸர்வஸ்வம் பலபல அபூர்வார்த்தங்களை ஆவிஷ்கரிக்கும். ... ... ...

ஸ்ரீரஸ்து.

# ஸர்வஜ்ஞலோககுரு ஸூக்தி ஸர்வஸ்வத்தில்

— இரண்டாவது பரிச்சேதம் —

## த்ரௌபதீ விபதுத்தாரம்

## ॥ द्रौपदीविपदुद्धारः ॥

ஶ்லோ ॥ द्रौपदीविपदुद्धार आस्तां कृष्णकृतः पुरा ।
योऽस्माभिः क्रियते संप्रत्यसावेव सुशोभनः ॥

सर्वभूतसुहृदो मम कोऽपि स्यान्न वैरिपदभागिति धृत्वा ।
मध्यवर्तिमहनीय वरेण्यान् प्रत्यनर्घवचनानि दिशामि ॥

— மத்யஸ்தர்களான மஹா விவேகிகளை நோக்கி —

37. நம்முடைய புத்திக்கெட்டாதகாலத்தில் த்ரௌபதிக்கு மஹாஸதஸ்ஸில் நேர்ந்த மஹத்தான விபத்தைக் கண்ணபிரான் போக்கியருளினதாகக் கதை கேட்டுவருகிறோம். உண்மையில் அந்த விபத்து பெரிதன்று; அதைப்போக்கினதும் பெரிதன்று. அர்வாசீனர்களால் த்ரௌபதிக்கு விளைக்கப்பட்டிருக்கும் விபத்தே மிகமிகப்பெரிது. இந்த விபத்தை நாம் போக்குவதுண்டே இதுதான் மிகச்சிறந்தது. ஸ்ரீவசநபூஷணதிவ்ய சாஸ்த்ரத்தில்- (19) "ஜிதேந்த்ரியரில் தலைவனாய் ஆஸ்திகாக்ரேஸரனாய் * கேஶவஸ்யாத்மா * என்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு தோஷமேதென்னில்;... .........த்ரௌபதீபரிபவம் கண்டிருந்தது க்ருஷ்ணாபிப்ராயத்தாலே ப்ரதாநதோஷம். பாண்டவர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க வைத்தது த்ரௌபதியுடைய மங்களஸூத்ரத்துக்காக. அர்ஜுநனுக்கு உபத்ய ஸாதத்த்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக." என்றுள்ள ஸ்ரீஸூக்திகளினால் கண்ணபிரானுடைய அந்தரங்க ப்ரீதி பாத்ரத்வமாகிற ஒப்புயர்வற்ற ப்ரபாவம்பெற்ற த்ரௌபதிக்கு துச்சாஸநாதிகளால் நேர்ந்தபரிபவம் மிகச்சிறிது, அல்லது பரிபவமேயன்று என்னலாம்படி இப்போதைய மஹாநுபாவர்களால் நேர்ந்துள்ள பரிபவமே ப்ரபலமாதலால் இதைப் பரிஹரியாதவளவில் நாமும் க்ருஷ்ண நிக்ரஹபாத்ரமாவோமென்னு மச்சத்தினால் இந்த த்ரௌபதீவிபதுத்தார ப்ரவ்ருத்தியில் சோம்பாதே யிறங்குகின்றோம்.

38. பிறருடைய நெஞ்சுக்கும் கோசரமல்லாத பலபல ஸேவைகளை அவலீலையாகச் செய்து நாம் புகழ்பெற்றிருந்தாலும் இந்த ஸேவை செய்யாதவளவில் 'நாம்செய்த ஸேவைகளத்தனையும் பழுதே' என்று அறுதியிடவேண்டியிருத்தலால் இந்த ஸேவையில் நாம் மிகுந்த ருசியுடன் ப்ரவர்த்திக்கிறோம். இந்த ப்ரவ்ருத்திக்குக் கண்டனமண்டநாதிகள் லக்ஷ்யமன்று. தத்வ ஜிஜ்ஞாஸுக்களுக்கு தத்வார்த்த முணர்த்துதலொன்றே லக்ஷ்யமாயிருக்கும். உலகில் விவாதம் விளைவது ஒன்றிரண்டு விஷயங்களிலல்ல; ஒன்பதினாயிரம் விஷயங்களிலுமல்ல; கோடிக்கணக்கான விஷயங்களில் விவாதங்கள் விளைந்திருக்கின்றன. அவற்றுள் சுவை மிக்கவை, சுவையற்றவை என இருவகுப்புண்டு; சுவைமிக்க விவாதங்களுக்குச் சில உதாஹரணங்களைக் கீழேகாட்டுவோம்.

39. குவலயாநந்தத்தில் ஒரு ச்லோகம்; “चन्द्रज्योत्स्नाविशदपुलिने सैकतेऽस्मिन् सरय्वाः वादद्यूतं चिरतरमभूत्सिद्धयूनोः कयोश्चित् । एको वक्ति प्रथमनिहतं कैटभं कंसमन्यः” இத்யாதி. இதன்பொருளாவது, ஸரயூநதியின் மணற்குன்றொன்றில் நல்லநிலாப்பொழுதில் ஸித்தயுவாக்கள் இருவர்வந்துசேர்ந்து நெடும்போது விவாதப்பட்டுக்கொண்டிருந்தார்களாம்; அந்த விவாதத்தின் ப்ரக்ரியை யாதெனில், பகவான் கைடபவதமும் செய்தார், கம்ஸவதமும் செய்தார்; ஆனால் கைடபவதம் முற்பட்டதா? கம்ஸவதம் முற்பட்டதா? என்று விவாதம். ஸித்தயுவாக்களிருவரில் ஒருவர் கைடபவதந்தான் முற்பட்டதென்கிறாராம்; மற்றொருவர் ‘இல்லையில்லை; கம்ஸவதந்தான் முற்பட்டது’ என்கிறாராம். இங்ஙனே விவாதம் ஓயாமல் நெடும்போது நடந்ததாம். இந்த விவாதம் எவ்விதமாக சாந்தமாயிற்றென்பது தெரியவில்லை.

40. ஸ்ரீவில்லிபுத்தூரில் திருமுக்குளத்தில் திவ்ய ப்ரபந்த நிஷ்ணாதரொருவரும் பௌராணிகரொருவரும் கூடினர். முந்தினவர் திருப்பல்லாண்டில் “செந்நாள் தோற்றித் திருமதுரையுள் சிலைகுனித்து ஐந்தலைய பைந்நாகத் தலைப்பாய்ந்தவனே!” என்கிற பாசுரத்தைக் கூறி, செந்நாள் தோற்றி – கண்ணபிரான் வடமதுரையில் திருவவதரித்தவுடனே, சிலைகுனித்து–கம்ஸனுடைய ஆயுதசாலையிலே புகுந்து அங்கிருந்தவில்லையெடுத்து முறித்தெறிந்து, உடனே ஐந்தலைய பைந்நாகத்தலைப்பாய்ந்தான்— யமுனையின் மடுவில் காளிய நாகத்தின்மீது பாய்ந்தான்— என்கிறார். பௌராணிகரோவென்னில், பெரியாழ்வார் சொன்னது மிகவும் பிசகு; ரிஷிகள் இங்ஙனம் சொன்னதில்லை; கண்ணன் அவதரித்தவுடனே அன்றிரவே கோகுலம் போய்ச்சேர்ந்து விட்டார்; அங்கு வெகுநாள் கழித்துக் காளியமர்த்தனம் நடந்தது. பிறகு வெகுநாள் (பலவருஷங்கள்) கழித்து கம்ஸப்ரேரிதரான அக்ரூரர் கண்ணனை மதுரைக்கு அழைத்துவர, அப்போது சிலைகுனித்த செய்தி நடந்திருக்கிறது. வஸ்துதத்துவ மிங்ஙனே யிருக்க, அவதரித்தவுடனே மதுரையில் சிலை குனித்ததாகப் பேசுவதும், திருவாய்ப்பாடி சென்று சேர்ந்த கதையைக்கூட எடுத்துப்பேசாமல் காளியமர்த்தனமும் மதுரையிலேயே நடந்ததென்று நினைக்கும்படியாகப் பேசுவதும் (இங்ஙனே ஆழ்வார் பாசுரமிட்டிருப்பது) புராண விருத்தமென்று கத்துகிறார். ஆழ்வாருடைய பாசுரந்தான் நமக்கு ப்ரபல ப்ரமாண மென்கிறார் அத்யாபகர். ஆழ்வார்களும் * இருக்குவாய் முனிக்கணங்களேத்த யானுமேத்தினேன் * என்கையாலே மஹர்ஷிகளின் வாக்குத்தான் பலீயஸ்ஸான ப்ரமாணமென்கிறார் பௌராணிகர். இருவரும் தங்கள் தங்கள் வாதத்தையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் இற்றைக்கும். விவாதம் இன்னமும் ஓய்ந்தபாடில்லை.

41. மேலே குறித்த விவாதமொன்றே யன்று; எத்தனையோ விவாதங்கள் நிகழ்ந்து கொண்டே யிருக்கின்றன; இன்னமுங் கேளீர். * சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த பேதைக் குழவி* என்கிற பெரியாழ்வார் திருமொழியைப் பற்றிக்கொண்டு அத்யாபகர், கண்ணனை யசோதை பக்கலிலே கொண்டு விட்டவள் தேவகிதான் என்கிறார்; பௌராணிகர் “இது மிகத் தவறு; *यमुनां चातिगम्भीरां नानावर्तझषाकुलाम् । वसुदेवो वहन् विष्णुं (कृष्णं) जानुमात्रोदको ययौ ॥* என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திலே பராசர பகவான் வஸுதேவரே கொண்டு விட்டதாய் ஸ்பஷ்டமாகக் கூறி யிருக்கையாலே ஆழ்வார் “தேவகி அசோதைக்குப் போத்தந்த” என்றது தப்பு என்கிறார்.

42. இன்னமுங் கேண்மின்; அத்யாபகர், * நாள்களோர் நாலைந்து திங்களளவிலே, தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய், வாள்கொள் வளை யெயிற் ருருயிர் வவ்வினன்*

என்கிற பெரியாழ்வார் பாசுரத்தைப் பற்றிக்கொண்டு 'சகட பங்கந்தான் முற்பட்டது, பூதநாவதம் பிற்பட்டது' என்கிறார். பௌராணிகர், 'ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பூதநாவதம் பேசின பிறகே சகட பங்கம் பேசப்பட்டிருப்பதால் அதற்கு விருத்தமான ஆழ்வார் பாசுரம் அநாதரணீயம்' என்று கத்துகிறார். அவ்வளவோடும் நில்லாமல் "ஆழ்வார்கள் பேசுவதெல்லாம் புராண விருத்தமாயும் ஔசித்ய விப்ரதீபமாயும் பரஸ்பர வ்யாஹதமாயுமே காணப்படுகின்றது; *வரிந்திட்ட வில்லால் மரமேழு மெய்து மலைபோ லுருவத்தொ ரிராக்கதி மூக்கு அரிந்திட்டவன்* என்று திருமங்கையாழ்வார் ஸப்த ஸால வ்ருக்ஷ பேதனம் செய்த பிறகு சூர்ப்பணகையின் அங்க பங்கம் செய்ததாகக் கூறுகின்றார்; இப்படியொரு கதா ஸந்தர்ப்பம் பொருந்துமா? சூர்ப்பணகா பங்கம் ஆரண்ய காண்டத்துக் கதை; ஸப்த ஸால பேதனம் கிஷ்கிந்தா காண்டத்துக் கதை; முன்னதைப் பின்னதாக வைத்தும், பின்னதை முன்னதாக வைத்தும் பேசிவிட்டால், கதைப் போக்கு எப்படி பொருந்தும்? அன்றியும், வான்மீகி பகவான் சூர்ப்பணகா பங்கத்தை இளையபெருமாள் செய்ததாகக் கூறியுள்ளாரேயன்றிப் பெருமாள் செய்ததாகக் கூறியிருக்கவில்லை. ஆழ்வார்கள் அதைப் பெருமாளே செய்ததாகக் கூறியிருப்பதும் பொருந்தாது. நம்மாழ்வார் குலசேகராழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் யாவரும் நியமேந பெருமாளுடைய க்ருத்யமாகவே கூறியிருப்பது பொருத்தமற்றதே யென்று பெரிய விவாதத்தைக் கிளப்பிவிட்டார்.

43. இன்னமும்; யசோதைப் பிராட்டி ஸ்ரீக்ருஷ்ண சிசுவுக்கு ஸ்தன்யம் கொடுக்க அஞ்சுவதாகக் கூறுவதாய் ஒரு பதிகம் பாடுகின்ற பெரியாழ்வார் *பொன்போல் மஞ்சன மாட்டி அமுதூட்டிப் போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகடமிறச் சாடி வடக்கிலகம் புக்கிருந்து, மின்போல் நுண்ணிடையா ளொரு கன்னியை வேற்றுருவம் செய்து வைத்த அன்பா வுன்னை யறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மம் தரவே." (3–1–2.) என்றொரு பாசுரம் பேசியுள்ளார். இப்போது கண்ணனுடைய பருவமோ முலைப்பாலுண்கிற பருவம்; சகடத்தைச் சாடின கதையைக் கூறினது தகும்; சகடமிறச் சாடியவுடனே வடவண்டை வீட்டில் புகுந்து ஒரு கன்னிகையை விகாரப்படுத்தி வந்ததாகக் கூறினது ஏற்குமா? இதே பதிகத்தில் மேற்பாசுரங்களிலும் ஜார க்ருத்யங்கள் அடுத்தடுத்துப் பேசப்படுகின்றன; ஸ்தநந்தய சிசுவுக்குத் தகுதியற்ற செய்கைகளைச் சொல்லுவதுமுண்டோ? என்கிறார் பௌராணிகர். *மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் பாசுரங்களைப் பழிக்கிறாயே பாவீ! என்று கத்துகிறார் அத்யாபகர்.

44. இன்னமும்; *தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப் பூடுக ளடங்க வுழக்கி, கானகம்படி யுலாவி யுலாவிக் கருஞ் சிறுக்கன் குழலூதினபோது* என்று பெரியாழ்வார் ப்ரலம்பாஸுரனையும் தேநுகாதிகளைப்போல கண்ணபிரானே கொன்றிட்டதாகக் கூறுகின்றார்; இவருடைய திருமகளாரான ஆண்டாள் "பிலம்பன் றன்னைப் பண்ணழியப் பலதேவன்வென்ற பாண்டி வடத்து" என்று ப்ரலம்பாஸுரவதம் செய்தது நம்பி மூத்த பிரானென்கிறாள்; இரண்டில் எது உண்மை? என்று கேட்கிறார் ஒரு பெரியவர். இதற்கு ஒருவர் சொல்லுகிறார்—*உன்னுடைய விக்கிரம மொன்றொழியாமலெல்லாம், என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழி யெழுதிக் கொண்டேன்" என்றவர் பெரியாழ்வாராகையாலே இவருடைய திருமொழியில் காண்பதுதான் உண்மை என்று. மற்றொருவர் சொல்லுகிறார்—பெரியாழ்வார் *गुरुमुखमनधीत्य प्राह வாகையாலே அவருடைய உக்தி ஸர்வாத்மநா ப்ரமாணமாகாது; ஆண்டாள் ஸாக்ஷாத் பகவத் திவ்ய மஹிஷியாகையாலே இவளுடைய

திருவாக்குத்தான் உபஜீவ்யமென்று. இந்த விவாதமும் ஓய்ந்ததில்லை; இருவரும் தாம் தாம் சொன்னவற்றையே சொல்லிக்கொண்டு கிடக்கின்றனர்.

45. த்ரிபுர ஸம்ஹார கதையொன்று ப்ரஸித்தமானது. பாணஸுர பங்க கதையை யருளிச் செய்யாநின்ற நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3-10-3.) *திரிபுரஞ் செற்றவனும் மகனும்* என்கிற பாசுரத்தினால் த்ரிபுர ஸம்ஹாரம் செய்தவன் சிவபெருமானே யென்பதை இசைந்து காட்டியுள்ளார்; இதைப் பின்பற்றித் திருமங்கையாழ்வாரும் "திரிபுர மூன்றெரித்தானும் மற்றை மலர்மிசை மேலயனும் வியப்ப" என்றருளியுள்ளார். திரிபுரஞ் செற்றவனென்ற நம்மாழ்வார் தாமே *உயர்வற வுயர்நலப் பதிகத்தில் *புரமொரு மூன்றெரித்து* என்கிற சந்தையினால் ஸ்ரீமந்நாராயணனே த்ரிபுர ஸம்ஹாரம் செய்தருளினதாகப் பேசினர். முன்னம் பேசினதற்கு முரணாகப் பின்னே பேசுவது எங்ஙனே பொருந்தும்? என்று கேட்கிறாரொரு பெரியவர். *विप्रतिषेधे परं कार्यम् * என்று சாஸ்த்ரமாகையாலே முரண்பாடு காணுமிடத்துப் பின்னே சொன்னதுதான் பரிக்ராஹ்ய மென்கிறாரொருவர்; *உயர்வேத நேர் கொண்டுரைத்து* என்று மணவாள மாமுனிக ளருளிச் செய்தபடி ச்ருதிச் சாயையாலே சொன்ன முதற் பதிகத்தி லுள்ளதே பரிக்ராஹ்ய மென்கிறார் மற்றொருவர். பாணஸுரனுடைய ஆயிரங் கைகளையும் வெட்டித் தள்ளினதாகப் புராண வரலாறு இல்லையாயிருக்க ஆயிரங் கரங்களையும் துணித்ததாக ஆழ்வார்கள் ஸாதிப்பது எங்ஙனே பொருந்துமென்று கேட்டால் வானம் நோக்குகிறார்களென்கிறாரொருவர்.

46. ஆளவந்தார் *அபராத ஸஹஸ்ர பாஜநம்* என்கிற சுலோகத்தில் "அகதிம் சரணாகதம் ஹரே க்ருபயா கேவல மாத்ம ஸாத்குரு" என்று தம்முடைய சரணாகதியைக் கடாக்ஷித்து க்ருபை செய்தருள வேணுமென்று முந்துற முன்னம் கூறி, முடிவில் "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா" என்று கூறுகின்றார். தம்முடைய சரணாகதிக்குப் பலன் கொடுக்கச் சொல்லுகிறாரா? ஸ்ரீமந்நாதமுனிகளின் குடல் துடக்குக்குப் பலன் கொடுக்கச்சொல்லுகிறாரா? இவ்விரண்டில் அவர் எதனாலே பேறுபெற்றார்? என்று ஒரு பெரியவர் கேட்கிறார். அதற்கு ஒருவர் சொல்லுகிறார்— "ஆளவந்தார் சரணாகதி செய்தது வாஸ்தவமாயிருந்தாலும் *ஜ்ஞாநாநந்மோக்ஷமாகையாலே மாநஸமாகக்கடவது* என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீ ஸூக்தியின்படியே அதை மாநஸமாகச் செய்திடாமல் வாசிகமாகச் செய்தபடியாலும், தம்மை நெடுங்காலம் பச்சையிட்டுத் திருத்திப்பணிகொண்ட மணக்கால் நம்பியை உபேக்ஷித்துத் தாம் காணாத நாதமுனிகளைப் புரஸ்கரித்தபடியாலும், அதுதன்னிலும் ஆத்மஸம்பந்தத்தையிட்டுப் பேசாதே ஔபாதிகமான தேஹஸம்பந்தத்தையிட்டு (பிதாமஹம் நாதமுநிம் என்று) பேசினபடியாலும் "நாதமுநிம் விலோக்ய" என்றது பழுதுபட்டது; "மத்வ்ருத்த மசிந்தயித்வா" என்று, தாமநுஷ்டித்த சரணாகதியைத் தாமே அகிஞ்சித்கரமாக முடித்திட்டபடியாலே அதுவும் பழுதுபட்டது—என்று. மற்றொருவர் சொல்லுகிறார்— 'ஆளவந்தார் பேறுபெற்றிலர் என்று முடிப்பது அழகிதன்று; தாம்செய்த சரணாகதியும் நாதமுநிபுரஸ்காரமும் பழுதாய் விட்டாலும் "க்ருபயா கேவலம்" என்று தாம் அவஷ்டம்பமாகக் கொண்ட பகவந்நிர்ஹேதுக க்ருபை எவ்விதத்திலும் மோக (मोघ) மாக மாட்டாதாகையாலே அதனால் பேறுபெற்றாரென்னக் குறையில்லை—என்று. "உண்மையில் ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நமுகேந சரணாகதி செய்ததானது எம்பெருமானாரைத் தம்மோடு கூட்டிவைக்கவேணுமென்றே. இந்தப்

பலன் அவர்க்குக் கைபுகவில்லை யென்பது நிஸ்ஸந்தேஹமும் நிர்விவாதமுமாகையாலே ஆள வந்தாருடையப்ரபத்தி நிஷ்ப்பலமாயிற்றென்பதே ஸம்பிரதாயம்'' என்கிறார் மற்றுமொருவர்.

47. இங்ஙனே பல்கோடி நூறாயிரம் விவாதங்கள் ஆங்காங்குத் தலைகாட்டி வருவது ப்ரஸித்தம். இந்த விவாதங்களுக்கு வஸ்துத: ப்ரஸக்தியுண்டு; இருதிறத்தார்க்கும் ப்ரமாணு வஷ்டம்ப மிருக்கையாலே இந்த விவாதங்கள் அஸ்தானேயல்ல; ஸ்தானே. என்னக் குறை யில்லை. த்ரௌபதியின் வஸ்த்ர லாபத்தைப் பற்றின விவாதத்திற்கோ பீஜலேசமுமில்லை. பூருவாசாரியர்களில் ஒருவராவது இதில் விவாதம் கொண்டதுண்டோ? விவாதபீஜமானஸ்ரீ ஸூக்தியை யருளிச்செய்திருப்பது தானுண்டோ? ''த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே'' என்று ரஸோக்தியாக வருளிச்செய்த ஒரு ஸூக்தியையே கொண்டு அப்பப்ப! என்ன வாக்கலஹம்! என்ன வாக்கோலாஹலம். எத்தனை அபார்த்த ப்ரபஞ்சனங்கள். ***एक्कक्कमेव्व चरिदे भणामि किं एक्कएक्कस्स**! (**एकैकमेव चरिते भणामि किम् एकैकस्य**) என்கிற சாகுந்தலச்லோகமொன்று தான் இங்கு நினைவுக்கு வருகின்றது. ரஸோக்தித்திரளே வடிவெடுத்த வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரான பிள்ளை லோகாசார்யருக்கும் அது அவர்ஜநீயமிறே. முமுக்ஷுப்படியில் இஃதொரிடமேயன்று ரஸோக்தியானது. மூன்று பிரகாணங்களிலும் மூன்றிடம் காட்டுவோம், 1. திருமந்த்ர ப்ரகரணத்திற்கு இதுவாயிற்று. 2. த்வய ப்ரகரணத்திற்கு ''பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள்விடாது; திண்கழலாயிருக்கும்'' என்பதாயிற்று. 3. சரமச்லோக ப்ரகரணத் திற்கு ''ணிச்சாலே நானும் வேண்டா நீயும் வேண்டா; அவை தன்னடையே விட்டுப் போங்கா ணென்கிறான்'' என்பதாயிற்று.

48. தன் பேர் காரியம் செய்ததே யொழியத் தானொன்றும் செய்யப்பெறவில்லையே யென்று எம்பெருமான் கிலேசப்பட்டதாக ஈட்டிலுமிருக்கிறதாம். இது அசைக்க முடியாத ப்ரமாணமாம். ஈட்டில் இதுமட்டுமா இருக்கிறது! பரஸ்ஸஹஸ்ரரஸோக்திகளில் எத்தனை காட்டலாம். ஒன்பதாம்பத்தில் திருமூழிக்களத் தூதுபதிகத்தில் ''தாம் தம்மைக் கொண்டு அகல்தல் தகவன்றென்றுரையீரே'' என்பது ஆச்சரியமான வொரு ஸ்ரீஸூக்தி. எம்பெருமான் தான் பிரிந்து போனால் போகட்டும்; தன்னையும் கொண்டுபோவது தகவோ? என்று கேளுங்களென்று தூதுபோவார்க்கு ஸந்தேசமுரைக்கிறாள் பராங்குசநாயகி. ''ஒரு குருகைக் குறித்து நிரதிசய போக்யரான தாம் போம்போது தம்மை வைத்துப்போக வேண்டாவோ வென்று விண்ணப்பஞ் செய்யுங்கோ ளென்கிறாள்.'' என்பது இருபத்து நாலாயிரப்படியவதாரிகை ''நிரதிசய போக்யரான தாம் போம்போது தம்மைக் கொண்டு போகை தம்முடைய தகவுக்குப் போருமோவென்று விண்ணப்பஞ் செய்யென்கிறாள்'' என்பது ஈட்டவதாரிகை. மேலே வியாக்கியான ஸ்ரீஸூக்திகளோ போக்யதையின் எல்லை யிலே நிற்பன; ''தமக்கு அகல வேண்டினால், இவ்வடிவைப் பிரிந்தார் பிழையாரென்று தம்மை வைத்தன்றோ போவது. தம்மைக் கண்ணுடிப் புறத்திலே சண்டறிவரே; தம்மைப் பிரிந்த தசைக்கு உதவுகைக்கன்றோ தம்மைக்கண்டது'' என்னுமிந்த ஸ்ரீஸூக்திகளுக்கு விண்ணெல்லாம் விலைபோதுமோ?

49. இவை இன்சுவைப் பொருளில் சிகரமாகப் பரிசணீயமாகுமத்தனையன்றோ. இங்கே இரண்டு கதைகள் நினைவுக்கு வருகின்றன. (1) ப்ரஹேலிகா பண்டிதரொருவர் 'எனக்கிப் போது ஆரோக்யம் ஸரியில்லை' என்பராம்; என்ன அநாரோக்யமென்று கேட்டால் 'நடந்

விடத்திலே வாச்யமுமிருக்கும்; வாச்யமுள்ள விடத்திலே வாச்யனுமிருந்து தீருவன். வாச்யம் ஸந்நிஹிதம்; வாச்யன் உபாஸ்தன் என்பது சாடுக்தியே யொழிய வேறன்று வேறன்று.

54. "முந்துற்ற நெஞ்சே! நயப்புடைய நாவீன் தொடைகிளவியுட் பொதிவோம்" என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் காணீர்; "(நெஞ்சை நோக்கி) நீயும் வேண்டாவென்கிறார்; உத்பத்திக்கு நீயும் வேண்டா நானும் வேண்டா; நெஞ்சிலே யூன்றி அநுபவிக்கைக்கு நீயுண்டாக வமையும்." என்று ஸாதித்துவிட்டு, உடனே ஸாதிக்கிறார்—"நெஞ்சின்றிக்கே கவிபாடப்போமோவென்னில்; நெஞ்சினுடைய ஸ்தானத்திலே ஸர்வேச்வரன் நின்று கவிபாடுவிக்குமென்று கருத்து" என்று. உண்மைகேளீர்; திருவாய்மொழியாயிரமும் ஸர்வேச்வரனே பாடுவித்தது என்னுமிடத்தை ஆழ்வார் ஓரிடத்திலன்று சொல்லிற்று. விசேஷித்து (7–9.) *என்றைக்குமென்னை* என்கிற திருவாய்மொழி ஊடிவரமாக அவதரித்துள்ளது. ஸர்வேச்வரனே பாடுவித்தாலும் ஆழ்வார் தமது நெஞ்சோடே கூடியிருக்கவேண்டியது இன்றியமையாததொன்றே. "நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப் பெற்றாலென் செய்யோம்" என்றும் "ஊனில் வாழுயிரே நல்லைபோ" என்றும் "நெஞ்சே நீ நினையாது இறைப்பொழுது மிருத்திகண்டாய்" என்றும் இப்புடைகளிலே ஸாதிப்பதெல்லாம் அலங்கார ப்ரௌடி மாத்ரமேயே. * पर्यायोक्तं तु गम्यस्य वचो भङ्ग्यन्तराश्रयम् * என்று சந்த்ராலோகத்திற் கூறியபடியே பர்யாயோக்த மென்பதோரலங்காரம்; வேறு சில அலங்காரங்களுக்கும் லக்ஷ்யமாம்படி பல பல ஸூக்தி விந்யாஸங்கள் ஆழ்வாராசார்ய திவ்ய க்ரந்தங்களிலே இடம்பெற்றுள்ளன. அதுகொண்டு தத்வார்த்த விப்லவம் செய்யலாகாது.

55. த்ரௌபதியின் விபத்தைப் போக்கினவன் எம்பெருமான் என்பதே தத்துவம். ப்ரபத்தி செய்ததற்காகப் போக்கினன் என்றாலும், திருநாமஸங்கீர்த்தனம் பண்ணினதற்காகப் போக்கினன் என்றாலும், அவள் தன்னிடத்தில் வைத்திருந்த அன்புக்காகப் போக்கினனென்றாலும், தன்னுடைய நிர்ஹேதுக கருணையினாலே போக்கினனென்றாலும் ஏற்கும்; இதில் பிணக்கில்லை. ஏனெனில், அவள் ப்ரபத்தி செய்ததும் வாஸ்தவம், திருநாம ஸங்கீர்த்தனம் பண்ணினதும் வாஸ்தவம். அநந்ய ஸாமாந்யமான அன்பு வைத்திருந்ததும் வாஸ்தவம். கண்ணபிரான் அவளிடத்திலே நிர்ஹேதுக க்ருபை வைத்திருந்ததும் வாஸ்தவம்.

56. ஒரு வைதிகர் அத்யயந சீலராயும் நித்யாக்நிஹோத்ரியாயும் ஸந்த்யாவந்தன நிரதராயுமிருந்தார். அவர்க்கு மஹத்தானவொரு விபத்து நேர்ந்தது. இவர் இதில் தப்பிப் பிழைப்பது அரிது என்றே எல்லாரும் அஞ்சிக் கிடந்தார்கள். அவர்க்கு அந்த விபத்து அவலீலையாகக் கழிந்துவிட்டது. அப்போது சிலர் சொன்னார்கள்—அவருடைய வேதாத்யயந ஸம்பத்து தான் அவரைக் காப்பாற்றியது என்று. வேறு சிலர் கூறினர்—அவருடைய அக்நிஹோத்ர ஸ்ரீதான் அவரை ரக்ஷித்தது என்று. மற்றுஞ் சிலர் செப்பினர்—அவர் அந்தி தொழுத அதிசயமே அவரைக் காத்தது என்று. ஆக மூவர் சொன்ன மூன்று ஹேதுக்களும் வெவ்வேறாக இருந்தாலும் மூன்றும் பொருத்தமே. இவை பரஸ்பர விருத்தங்களல்லவே. மேலே கூறித்த வார்த்தைகளை மூவர் சொன்னதாக வைக்கவேண்டா; ஒருவரே ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு விதமாகச் சொல்லலாம்; சொன்னால் 'இது வ்யாஹதம்' என்று வாய்திறப்பாரில்லை; வாய் திறக்கமுடியாது. த்ரௌபதி பக்கலிலே,*धर्मोऽर्थ इव पूर्णश्रीः अर्थो धर्म इव त्वयि* என்றாப்போலே நாம ஸங்கீர்த்தனமும் குறையற்று ப்ரபத்தியும் குறையற்றிருக்கையாலே ஓரிடத்திலே ஒன்றைச் சொல்லி மற்றோரிடத்திலே மற்றொன்றைச் சொல்லுமளவில் இதில்

என்ன அநுபபத்தி சொல்ல முடியும்? உபாத்யாயர் மாணுக்கனைக் கேட்கிறுர்—'பயலே! இதுகாறும் எங்கே போயிருந்தாய்?' என்று. அதற்கு அவன் அனுஷ்டானம் பண்ணப் போயிருந்தே னென்கிறுன்; ஸஹபாடி கேட்க ஸந்த்யாவந்தனம் பண்ணப் போயிருந்தே னென்கிறுன். 'இரண்டில் எது மெய்?' என்று கேட்பாரில்லை. இரண்டும் மெய்யே.

57. த்ரௌபதிக்கு ஸபங்க கோஷ்டியில் பரிபணனையையும் ப்ரபத்தியினுல் அவள் துயர் தீர்ந்தமையையும் யாரும் அபலபிக்க முடியாது. "சங்க சக்ர கதா பாணே!" இத்யாதி மஹா பாரத ச்லோகத்தைப் பரக்க வியாக்கியானித் தருளாநின்ற பெரியவாச்சான் பிள்ளை மணவாளமாமுனிகளின் ஸரணியிலே நிகமித் தருளுகிறபடி காணீர்;

"*சங்க சக்ர கதா பாணே* என்கையாலே ஜ்ஞாந ஶக்த்யாதி யோகத்தைச் சொல்லி *த்வாரகாநிலயாச்யுத கோவிந்த புண்டரீகாக்ஷ!* என்கையாலே வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணங்களைச் சொல்லி *ரக்ஷ மாம்* என்கையாலே அகிஞ்சநாதிகாரியென்னு மிடம் சொல்லி *சரணாகதாம்* என்கையாலே உபாயாத்யவஸாயம் சொல்லித் தலைக்கட்டு கிறது. இத்தால் லஜ்ஜாபுரஸ்ஸரமாக இதரோபாயத்யாகஞ் சொல்லி ஸித்தோபாய ஸ்வீகாரம் பண்ணுகை அதிகாரி க்ருத்யமென்றதாயிற்று." என்று.

இந்த ஸ்ரீஸூக்திகளால் த்ரௌபதி உபாயாந்தர ஸந்தமுமறியாத ஸித்தோபாய ஸ்வீகார நிஷ்டை யென்பது அஸந்திக்தமாகத் தேறிற்று.

58. திருவிருத்தத்தில் (33) *அருளார் திருச்சக்கரத்தால்* என்கிற பாட்டின் ஈட்டில் "ஸாஹம் கேஶக்ரஹம் ப்ராப்தா த்வயி ஜீவத்யபி ப்ரபோ" இத்யாதிக்கு விபுல வியாக்கியான முள்ளது. பரமபோக்யமான அவ்விடத்துப் பங்க்திகளையும் கீழே காட்டுகிறேன்;—

"[ஸாஹம்] இவ்வருகுள்ளவை யொன்றும் தஞ்சமல்ல; நீயே ரக்ஷகனென்றிருக்கிற நான். [கேஶக்ரஹம் ப்ராப்தா] ஶத்ருக்கள் வந்து என் தலைமயிரைப் பிடிக்கையாகிற இப் பரிபவத்தை ப்ராப்தையானேன். [த்வயி ஜீவத்யபி ப்ரபோ!] உன் ஸத்தைக்கும் நான் பட்ட பரிபவத்துக்கும் ஒரு சேர்த்தியில்லை. [ப்ரபோ!] என்னைப்போலே கையும் வளையுமாயிருந்து நானிப்படி படுகிறேனே? உன்னுடைய புருஷோத்தமத்வத்துக்கும் ஶரணாகதையான நான் நோவுபடுகிற விதுக்கும் என்ன சேர்த்தியுண்டு? "ரக்ஷ மாம் ஶரணாகதாம்" என்றவளிறே. ...........[சங்க] எப்போதும் கைகழலா நேமியானு யிருக்கிறது நின்கைக்கு ஆபரண மாகவோ? எம்மேல் வினை கடிகைக் கன்றோ? [த்வாரகாநிலய!] 'தஸ்ஸ: வாஸுதே யாதா' என்று அவ்வாயுதங்களும் நாலும் பரமபதத்திலே யென்று சொல்லலாமோ? அவதரித்து அண்ணியையான நீ மீளவும் பரமபதத்திற் போனுயோ? [அச்யுத!] இங்கே ஸந்நிஹிதனுய் வைத்து ஆச்ரிதரை எங்கே நழுவவிட்டாய்? [கோவிந்த!] பசுக்களை ரக்ஷியேன், வஸிஷ்டாதி களையே காண் நான் ரக்ஷிப்பதென்று சொல்லவல்லையே? குறைய நின்றுருடைய ரக்ஷணத் துக்காக அபிஷேகம் பண்ணியிருக்கிறவனல்லையோ? [புண்டரீகாக்ஷ!] குளிர்ந்து சேர்த்து ஏலமிட்ட தண்ணீரை விடாயர்க்கு வார்க்காதே நிரபேக்ஷர்க்கு வார்க்குமாபோலே அக்கடாக்ஷங்கொண்டு நித்யஸூரிகளை நோக்க விருக்கிறுயோ? ஆனுல் இப்பரிகரங்களைக் கொண்டு செய்யச் சொல்லுகிற தென்னென்ன; [மாம் ரக்ஷ.] 'நீயொருவனுமே ரக்ஷகன்,

என்னுடைய ரக்ஷணத்தில் தீக்ஷித்திருக்கிறவர்களும் என்னோபாதி குழைச்சரக்கு' என்றிருக்கிற வென்னை ரக்ஷி. [ஶரணாகதாம்] 'நம்மை ரக்ஷகனென்றிருந்தாயோ? அவனுரிகிற துகிலை நீயும் ஒருகைபற்றுநின்றாயே!' என்ன; ஆகில் அதை விட்டேனென்கிறாள். [மாம்] அல்லாதாரை வ்யாவர்த்திக்கிறது; * ஶரணாகதாம் * என்கையாலே தன்னை வ்யாவர்த்திக்கிறது." ஆக இந்த ஸ்ரீஸூக்திகளினால் த்ரௌபதி ஸ்வவ்ருத்திவிரோதிஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி செய்த சுத்த ப்ரபந்நையென்பது நன்கு காட்டப்பட்டது. இவளுக்கு உபாயாந்தர ஸம்பந்தம் சொல்லுவதும், அதனால் ப்ரபத்தி பலிக்கவில்லையென்று சொல்லுவதும் அவளுக்கு அபூர்வ பரிபவமேயாகும். இதற்கு ஒரு ஆசார்யருடைய ஸ்ரீஸூக்தியும் ஈஷத்தும் இடந்தரவில்லையென்று நிரூபித்து அவளுக்கு நேர்ந்த நவீந பரிபவத்தைப் போக்கினோமானோம்.

இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று.

---

## — மூன்றாவது பரிச்சேதம் —

### உட்புகுந்து ஆராயப்பட வேண்டிய விஷயங்கள்.

59. த்ரௌபதி திறத்திலே இவர்கள் கிளப்பியுள்ள விவாதத்தை கஜேந்திராழ்வானிடத்திலும் தாராளமாகக் கிளப்பலாம். எங்ஙனே யென்னில்; ஸ்ரீ வசந பூஷணத்தில் த்ரௌபதியோடொக்க கஜேந்திராழ்வானையும் ப்ரபத்தி செய்தவர்கள் திரளிலே பரிகணநம் பண்ணினார் பிள்ளைலோகாசார்யர். ஆனால் எங்களாழ்வானுடைய திருவடியான நடாதூரம்மாள் கஜேந்திராழ்வான் ப்ரபத்தி பண்ணினதாகக் கூறவேயில்லை அவர் கூறியுள்ளது "[illegible]" என்றும், "நக்ராக்ராந்தே கரீந்த்ரே முகுலிதநயநே மூலமூலேதி கிந்நே" என்றுமே யாயிற்று. நாம ஸங்கீர்த்தனம் பண்ணிக் கத்திக் கதறினதாகத் தான் சொல்லப்பட்டது. அவனுக்கும் ப்ரபத்தியினால் பேறு கிடைக்கவில்லையென்றும், த்ரௌபதி கோவிந்தா! கோவிந்தா! என்று கத்தினாப்போலே அவனும் மூலமே! மூலமே!! என்று கத்தினதனால்தான் பேறு கிடைத்ததென்றும் சொல்லித் தீரவேணும். ப்ரபத்தி பண்ணினவர்கள் பெரும்பாலும் நாமஸங்கீர்த்தனமும் பண்ணியிருக்கையாலே விவாதத்தையும் விப்லவத்தையும் எங்கும் புகவிடலாம். ப்ரபத்திக்கு ஆசார நியமமில்லாமையை உபபாதிக்கின்ற பிள்ளைலோகாசாரியர் "த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று." என்றருளிச் செய்தவொரு ஸ்ரீஸூக்தி போதும் விபரீத வாதிகளை வாய்மாளப் பண்ண. எங்ஙனே யென்னில்; த்ரௌபதியின் ப்ரபத்தி பலிக்கவில்லை யென்பது தத்துவமா யிருந்தால் "அவள் ஆசார நியதி கொள்ளாமல் ரஜஸ்வலையாயிருந்து ப்ரபத்தி பண்ணினபடியால்தான் அவளுடைய ப்ரபத்தி பழுதாயிற்று" என்று எளிதாகச் சொல்லிவிடலாமிறே. அப்போது இந்த ஸ்ரீஸூக்தியே பொருளற்றதாய் விடுமன்றோ. இதுதான் முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது.

60. ஸர்வஜ்ஞரான பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியின் முதல் சூர்ணையில், முமுக்ஷுவானவன் மூன்று ரஹஸ்யங்களை யறியவேண்டு மென்று ப்ரதிஜ்ஞை செய்தார். அந்த மூன்று ரஹஸ்யங்களுக்குள் முதல் ரஹஸ்யம் திருமந்திரம்; அதாவது அஷ்டாக்ஷர மஹாமந்த்ரம் என்றார் இரண்டாவது சூர்ணையில். அதற்குப்பிறகு அந்த திருமந்திரத்தினுடைய வைபவத்தை விரிவாக வெளியிடத் திருவுள்ளம்பற்றிப் பத்தாவது சூர்ணை வரையில்

சில விஷயங்களைச் சொல்லிக்கொண்டு போகிறார். பதினோராவது சூர்ணையில் எல்லாமந்திரங்களிற் காட்டிலும் அஷ்டாக்ஷரமஹாமந்த்ரம் முக்கியமானது என்றார். அதைப் பதின்மூன்றுவது சூர்ணையில் விவரிக்கும்போது "இத்தை வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள்" என்று ஸாதித்தார். இந்த சூர்ணையில் இத்தை என்றதற்கு அர்த்தம் திருமந்த்ரமேயொழிய வேறொன்று அன்று. திருமந்த்ரத்தின் ஏற்றந்தானே கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்டது. அதனுடைய ஏற்றந்தானே மேலேயும் நிரூபிக்கப்படுகிறது. ஆகவே, திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்தை வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் விரும்பினதாக மூலத்தில் சொல்லப்படுகிறதென்று தேறிற்று.

61. வியாக்கியானம் செய்தருளுகிற மணவாள மாமுனிகள் வேதங்களிலிருந்தும் மஹர்ஷிகளின் நூல்களிலிருந்தும் ஆழ்வாராசார்யக்ரந்தங்களிலிருந்தும் அஷ்டாக்ஷரத்தின் ஏற்றத்தைத் தெரிவிக்கிற வசனங்களையே எடுத்துக் காட்டவேணு மென்பதுபற்றி நாம் சொல்லவேண்டியதில்லை. இங்கு விஷயம் அதுதானே. வேறொன்றின் பெருமையை இங்கு எடுத்துக் காட்டுவதனால் பயனில்லை யன்றே. மணவாள மாமுனிகள் எது விஷயமோ அதைத்தான் அருளிச் செய்வரென்பதும், விஷயமல்லாததை மநஸாபி ஸ்மரிக்கமாட்டாரென்பதும் ப்ரஸித்தமானது. அப்படிப்பட்ட மணவாள மாமுனிகள் இந்த (13) சூர்ணையின் வியாக்கியானத்தில் மிக விரிவாகப் பல மேற்கோள்களை யெடுத்துக்காட்டும்போது நாராயண என்கிற திருநாமத்தின் ப்ரசம்ஸையுள்ள வசனங்களையே பெரும்பாலும் எடுத்துக்காட்டியுள்ளார். "நாராயணபரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:" "திவ்யோதேவ ஏகோ நாராயண:" "வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" இத்யாதிகளான பல வசனங்களை வேதங்களிலிருந்து எடுத்துக்காட்டுகிறார். மேலே "ஸங்கீர்த்ய நாராயண சப்தமாத்ரம்" "நாராயணேதி சப்தோஸ்தி" என்றிப்படிப்பட்ட வசனங்களை மஹரிஷி க்ரந்தங்களிலிருந்து எடுத்துக் காட்டியுள்ளார்.

62. மேலே *வண்புகழ் நாரணன்* செல்வ நாரணன் *வாழ்புகழ் நாரணன்* என்றிப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை திவ்ய ப்ரபந்தங்களிலிருந்து எடுத்துக் காட்டியுள்ளார். இடையிடையே அஷ்டாக்ஷரமென்றும் திருவெட்டெழுத்தென்றும் ஸ்பஷ்டமாகவுள்ள வசனங்களையும் எடுத்துக் காட்டி யிருக்கிறாரென்பது உள்ளதே. அதைப்பற்றி விசாரமில்லை. நாராயண என்கிற சொல்மாத்திர முள்ள விடங்களை விசேஷமாக வெடுத்துக்காட்டியிருக்கிறாரே. அதைப்பற்றியே விசாரம். அஜாமிளன் நாராயணநாமம் சொன்னானென்றால், அவன் அஷ்டாக்ஷரம் சொன்னானென்றதாகுமோ? கஜேந்திராழ்வான் "நாராயணாவோ" என்றானென்றால் அவன் திருமந்த்ரம் சொன்னானென்றதாகுமோ? "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்றால் திருமந்த்ரம் நான்முகனைப்படைத்தது என்றதாகுமோ? மேலே காட்டின ஸ்ரீஸூக்திகளை யெல்லாம் மணவாள மாமுனிகள் எடுத்துக் காட்டியிருக்கிறாரே. இது எப்படி ப்ரக்ருதோபயோகியாகும்? மூலத்தில் பிள்ளை லோகாசாரியர் அஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தின் பெருமையை ப்ரஸ்தாவித்திருக்கிறாரே யல்லது நாராயண நாமத்தின் ப்ரசம்ஸையைத் தொட்டவரல்லர். அப்படியிருக்க நாராயண நாமத்தை பட்டுப் ப்ரஸ்தாவித்திருக்கிற வசனங்களை இந்த ஸ்தலத்திலே எதற்காக எடுத்துக்காட்டுவது?

63. மேலே இருபத்திரண்டாவது சூர்ணை—"மற்றெல்லாம் பேசிலு மென்கிறபடியே அறியவேண்டு மர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு" என்பது திருமந்திரத்தின் ஏற்றத்தை

நிகமனம் செய்வது. அதில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிற திருமங்கையாழ்வார் பாசுரமானது நேராக அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தையே பற்றியது. "நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றது முன்னடியார்க்கடிமை" என்று ஸ்பஷ்டமாக விருக்கிறதன்றே. அப்படி அஷ்டாக்ஷர ப்ரசம்ஸையுள்ள வசனங்களையே எடுத்துக்காட்டவேண்டியிருக்க, நாராயண நாம மாஹாத்ம்யத்தைப்பற்றின வசனங்களை எடுத்துக்காட்டியிருப்பது எப்படி பொருந்தும்?

64. இதனிடையில் 14, 15, 16 சூர்ணைகள்—"வாச்யப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம். அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்றுதவும். த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே" என்பவை. கீழில் சூர்ணைகளும் மேலில் சூர்ணைகளும் திருவஷ்டாக்ஷர மஹிமையைப் பற்றியே யிருக்க, இந்த சூர்ணைகள் வேறு விஷயமாக அவதரித்திருப்பதாகத் தெரிகிறது. "வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம்" என்கிற சூர்ணையும் "அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்றுதவும்" என்கிற சூர்ணையும் பொதுவாகக் காணப்பட்டாலும், "த்ரௌபதிக்கு ஆபத்திலே" இத்யாதி சூர்ணையானது பொதுவான தன்றே. த்ரௌபதீ வ்ருத்தாந்தத்தில் அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தின் ப்ரஸ்தாவ ப்ரஸக்தியே கிடையாதே. அவள் சொன்னது கோவிந்தநாமம். அதைப்பற்றி மூமுக்ஷுப்படியில் திருமந்திரத்தின் பெருமை சொல்லுமிடத்திலே ப்ரஸ்தாவம் செய்வது எப்படிப் பொருந்தும்? மற்ற மந்த்ரங்களைக் காட்டிலும் திருமந்த்ரமே சிறந்தது என்று சொல்லி நிரூபணம் செய்து வருமிடத்திலே கோவிந்த நாமத்தின் பெருமையை உபபாதிப்பதனால் என்னாகும்? இங்கு வியாக்கியானத்தில் "நாராயண சப்தார்த்தத்தில் ஏகதேசத்துக்கு வாசகமானதொரு திருநாமம் செய்தபடி கண்டால் இதின் ப்ரபாவம் கிம்புநர்ந்யாய ஸித்தமிறே யென்று கருத்து" என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்திருக்கக் காண்கிறோம். உண்மையில் நாராயண நாமத்தின் பெருமையைப்பற்றி நிரூபணம் செய்வது இந்த பிரகரணத்திற்கு ப்ரமேயமாக இருக்குமானால் மேலே யெடுத்துக்காட்டின வியாக்கியான ஸ்ரீஸூக்தி பொருத்தமாகும். இங்கு ஆதியோடந்தமாகத் திருமந்த்ரத்தின் பெருமை விஷயமே யல்லது திருநாமத்தின் பெருமை விஷயமல்ல என்பதை நாம் அடிக்கடி சொல்லவேண்டுமோ? இதை யாரும் ஆக்ஷேபிக்க முடியாதன்றே. அப்படி திருமந்த்ர ப்ரபாவம் நிரூபிக்கப்பட்டு வருமிடத்து கோவிந்த நாமம் த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்ததென்று சொல்லுமளவில் அது ப்ரக்ருதோப யோகியாக எப்படியாகும்? என்பது ப்ரபல ஶங்கை.

65. இந்த சங்கைக்கு ஒருவிதமாகப் பரிஹாரம் செய்யலாம். அதாவது, மேலே பதினெட்டாவது சூர்ணை—"இதுதான் குலந்தருமென்கிறபடியே எல்லா வபேக்ஷிதங்களையும் கொடுக்கும்" என்பது. அங்கு மணவாளமாமுனிகள் "இம்மந்த்ரந்தான் அதிகாராநுகுணமான அபேக்ஷிதங்களை யெல்லாம் கொடுக்கும்" என்று வியாக்கியானம் செய்தருளுகிறார். இதற்கு ப்ரமாணமாக மூலகாரர் தாமே யெடுத்துக்காட்டியிருக்கிறபாசுரம் * குலந்தரும் செல்வந் தந்திடுமென்பது. அப்பாசுரம் நாராயண நாமத்தைப் பற்றினதேயல்லது திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தைப் பற்றினதன்று என்பது, "நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்" என்கிற ஸுஸ்பஷ்டோக்தியினால் விளங்காநின்றது. ஏவஞ்ச, நாராயண நாமத்திற்குச் சொல்லுகிற பெருமை யெல்லாம் நாராயணாஷ்டாக்ஷர மஹாமந்திரத்திற்கும் சொன்னதாகும் என்று மூலகாரரான பிள்ளை லோகாசாரியர் திருவுள்ளம்பற்றி யிருக்கிறாரென்பது நன்கு விளங்கிற்று. அந்தத் திருவுள்ளத்தை யநுஸரித்து மணவாளமாமுனிகள் வியாக்கியானம் செய்தருளியிருப்பதால் தவறு ஒன்றுமில்லை என்று சொல்லிவிடலாம்.

66. இது வாஸ்தவம். திருமங்கையாழ்வார் எம்பெருமானிடத்தில் திருவஷ்டாக்ஷர மந்திரத்தைப் பெற்றாரே யொழிய நாராயண நாமத்தை மாத்திரம் பெற்றிலர் என்பது சரித்ர ஸித்தம். அவருடைய தனியனிலும் "வாழியரோ மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்......" என்றுள்ளது ப்ரஸித்தம். ஆகவே தாம்பெற்ற மந்திரத்தின் பெருமையையே * வாடினேன்வாடி பதிகத்தினால் விளக்கியருளுகிறார் என்று கொள்ளக் குறையில்லாமையாலே இது பொருத்தமானதே. "நான்முகனை நாராயணன் படைத்தான்" "நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே" என்றிப்படிப்பட்ட வசனங்களில் அஷ்டாக்ஷர ப்ரஸ்தாவ ப்ரஸக்தியை எந்த விதத்தாலும் நிரூபிக்க முடியாதாகையாலே மேலே குறித்த பாசுரங்களையும் அவைபோன்ற பல பாசுரங்களையும் ச்லோகங்களையும் மணவாளமாமுனிகள் எடுத்துக்காட்டியிருப்பது எங்ஙனே பொருந்தும்? உத்தேச்யமான திருவஷ்டாக்ஷரத்தின் பெருமைக்கு இந்த ப்ரமாணங்கள் எப்படி உபபாதகமாகும்? என்கிற ஸந்தேஹத்தைக் காலக்ஷேபபரர்களான வித்வான்கள் ப்ரஸங்கிப்பதுண்டு.

67. இதெல்லாம் ஏற்கெனவே பூர்வ க்ரந்தங்களில் எடுத்து ஸமாஹிதங்களே. ஆசார்ய ஹ்ருதயத்தில் நான்காம் ப்ரகரணத்தில் முதல் சூர்ணையிலும் பத்தாவது சூர்ணையிலும் "வ்யாபக மந்த்ரமாக உபதேசித்து" "எண் பெருக்கி லெண்ணுந் திருநாமத்தின் ஶப்தார்த்தங்களைச் சுருக்கி" என்றுள்ள ஸ்ரீஸூக்திகளின் வியாக்கியானம் ஸேவித்தாலும் போதும். ஸந்தேஹம் தோன்றக்கூடிய இடங்களிலே தத்வஜ்ஞானமும் தத்பரிஹாரமும் இல்லாமலில்லை. தத்வதீபதீபவ்யாகாஶத்தில் வாதிகேஸரி ஸூக்தியுமுள்ளது.

68. இந்த மூன்றாவது பரிச்சேதத்தின் ஸாராம்ஶம் இவ்வளவே. திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்திற்குக் காட்டவேண்டிய பெருமையை அதன் ஏகதேஶமான நாராயணத் திருநாமத்திற்குக் காட்டி யருள்வதுபோல, வ்யக்திக்குக் காட்டவேண்டிய பெருமையை அதன் ஏகதேஶமான திருநாமத்திற்குக் காட்டியருளினதும் குறையற்றதே யென்று. இங்ஙனன்றாகில் திருமந்த்ரத்தின் பெருமையை உபபாதிக்க வேண்டுமிடத்தில் நாராயண நாம மாத்ரத்தைப் பற்றின ப்ரமாணராஶிகளை மாமுனிகள் எடுத்துக் காட்டி யருளினது ஸர்வாத்மநா அஸமஞ்ஜஸமேயாகும். முமுக்ஷுப்படியில் திருமந்த்ர ப்ரபாவ கீர்த்தனம் ப்ரஸக்தமே யொழிய திருநாம ப்ரபாவ கீர்த்தனம் ப்ரஸக்தமேயன்று. அவ்யக்தவ்யஜ்ஞமாகிற தோஷம் மூலவியாக்கியானங்க ளிரண்டுக்கும் அபரிஹார்யமே யாகும். ஸ்ரீஸூக்தி போகிற போக்கை யறியாதார் செய்யும் க்ஷோதங்களுக்குச் செவி கொடுக்கத் தகாதென்க.

மூன்றாவது பரிச்சேதம் முற்றிற்று.

## — நான்காவது பரிச்சேதம் —

### மணவாளமாமுனிகளின் வியாக்கியான சைலீ விவரணம்

69. மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளுக்கு அஸாதாரணமான ஒரு சிறப்புண்டு. பிள்ளைலோகாசார்யருடையவும் அவருடைய திருத்தம்பியாருடையவும் ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பர விரோதமோ பூர்வ ஸ்ரீஸூக்தி விரோதமோ ஔசித்ய விரோதமோ ஆபாததஃ தோன்றுவதற்கு ஸ்வல்ப ப்ரஸக்தி யிருந்தாலும் எடுத்துக் களையு மழகு மாமுனிகளின் வியாக்கியானங்களிலே அஸாதாரணமாக விளங்கும். அப்படிப்பட்ட அரிய பெரிய விமர்ஶங்களுள் சிலவற்றை இங்கெடுத்துக் காட்டுவோம். இடையில் இஃது ஒரு பெரிய விருந்தாகக்கொள்ளத்தக்கது. இந்நூலுக்கு இது ஜீவநாடி யென்றும் கொள்ளத்தகும்.

70. ஸ்ரீவசநபூஷணத்தில் (9) "ஸம்ச்லேஷ விச்லேஷங்களிரண்டிலும் புருஷகாரத்வம் தோற்றும்" என்ற சூர்ணைக்கு வியாக்கியான மருளிச் செய்து தலைக்கட்டினபின்—

> "திருவடி ராக்ஷஸிகளை அபராதாநுகுணம் தண்டிக்கும்படி காட்டித்தரவேணுமென்றவளவில் பிராட்டி அவனுடனே மன்றாடி ரக்ஷித்தவித்தனையன்றோ? *ஊ_தமெஉயிஙி....... என்று பவநாத்மஜன் நிமித்தமாக ரக்ஷித்தாளென்றன்றோ பட்டருமருளிச் செய்தது. அவ்விடத்தில் புருஷீகரித்தமை எங்ஙனேயென்னில், பலாத்காரத்தாலன்றிக்கே அநுஸாரத்தாலே அபராதங்களைப் பொறுப்பிக்கையாலே புருஷகாரத்வமென்கிறது." என்றருளிச் செய்தது காண்க.

71. மேல் (11) "இருவரையும் திருத்துவது முபதேசத்தாலே" என்ற சூர்ணையில். "ஶ்ராவயதி என்கிறவிது ஈச்வரவிஷயமாகவே பூருவர்களின் க்ரந்தங்கள் பலவற்றிலும் காணப்பட்டதாகிலும், "ஸுயவா விஉ-வா_நாஉவி ஹ ஹவஉா ஶ்ரு யணொவமெஶ: ஶ்ராவயிதரக்ஷ; *விதி_தஸ்ஹி...... ஊ_தி ஶாவணம் வ்ருதகூ-வமெஶாக." என்று தஸ்நீவத்திலே சேதந விஷயமாகவும் ஜீயாருளிச் செய்கையாலே இவ்விடத்திலும் சேதநவிஷயமாகவும் சொல்லக் குறையில்லை" என்றருளிச் செய்ததும் காண்க.

72. மேலே (22) "அர்ஜுநனுக்கு உதூலாஶாங்கள் பண்ணிற்றும் ஆபத்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக" என்ற சூர்ணைக்கு வியாக்கியானமருளிச் செய்தபின்,

> "உதூலாஶங்கள் பண்ணிற்றும் ஆபத்யுபதேசம் பண்ணிற்றுமிவளுக்காகவாகில், இவன் தோஷத்தைப் பச்சையாகக்கொண்டு அங்கீகரித்தானென்னுமது கூடாதீயென்னில்; அதுக்குக் குறையில்லை. இவள் காயஉாயமாக இவனைக் குறித்து இவையெல்லாம் செய்கிறவிடத்தில் இவன் தோஷங்களைப் பார்த்து முகம் சுளியாமல் உகப்போடே செய்கையாலே ... ..."

என்றருளிச் செய்ததும் காண்க. இங்ஙனே பலவுண்டு ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில். இனி தத்வத்ரய வியாக்கியானத்தில் சிறிது செல்வோம்.

73. தத்வத்ரய அசித்ப்ரகரணத்தில் (40) "குணவிநிமயம் பஞ்சீகரணத்தாலே" என்று மூல ஸ்ரீஸூக்தியுள்ளது. பஞ்சீகரணமாவது என்னவென்றால். ஆகாசம் முதலான ஐந்து பூதங்களையும் தனித்தனியே இரண்டு கூறாகப் பிரித்து, அவற்றிலே ஒரு கூறை அப்படியே வைத்திட்டு, மற்றொரு கூறை நாலு கூறாக்கி அந்த கூறுகளை மற்ற நான்கு பூதங்களிலே கூட்டி எல்லா பூதஙகளிலும் எல்லாக் குணங்களு முண்டாம்படி பண்ணுகை என்று விவரணம் காட்டப்பட்டது. இப்படி பஞ்சீகரணத்தாலே எல்லா பூதங்களிலும் எல்லாமு முண்டாயிருந்தால் ஆகாசம் வாயு தேஜஸ்ஸு அப்பு ப்ருதிவி யென்று பூதங்களை பேதப் படுத்தி வ்யவஹரிப்பது எங்ஙனே கூடுமென்று சங்கை யுதிக்கிறது. இதைப்பற்றி மாமுனிகள் அருளிச் செய்வது பாரீர்—" இப்படி பஞ்சீகரணமானாலும் அவிபக்தமான அர்த்தங்கள் (அர்த) ப்ரதாநங்களாய் நிற்கையாலே ஆகாசாதி பூத பேத வ்யவஹாரத்துக்கும் குறையில்லை" என்று. இந்த ஸ்ரீஸூக்தியின் கருத்து யாதெனில், ஒவ்வொரு பூதத்தையும் இரண்டு கூறாக்கினபோது ஒரு கூறுமட்டுமே விபாகம் செய்யப்பட்டு இதர (நான்கு) பூதங்களில் கால் கால் பாகமாகச் சேர்க்கப்பட்டது. மற்றொரு கூறு அடியோடு விபாகம் செய்யப்படாமல் அப்படியே நிறுத்தப்பட்டிருப்பதால் அதனுடைய ப்ராசுர்யத்தைக் கொண்டு இது ஆகாசம், இது ப்ருதிவி..........என்று பேத வ்யவஹாரம் செய்யப்பட்டு வருகிறதென்றதாயிற்று.

74. பஞ்சீகரணம் த்ரிவிருத்கரணம் என்று இரண்டுண்டு. சாந்தோக்யத்தில் த்ரிவ்ருத்கரணம் மட்டுமே சொல்லிற்று; பஞ்சீகரணம் சொல்லப்படவில்லை. இதைப் பற்றிச் சிலர் சங்கிக்கக் கூடுமென்று திருவுள்ளம் பற்றின மாமுனிகள் 41. சூர்ணையின் வியாக்கியானத்திலே அருளிச் செய்திருப்பது—

"சாந்தோக்யத்தில் பஞ்சீகரணம் சொல்லாதே த்ரிவ்ருத் கரணத்தைச் சொல்லுவானென்னென்னில்; அங்கு தேஜோபந்ந (तेजोबन्न) ங்கள் மூன்றினுடையவும் உத்பத்தி மாத்ரமிறே சொல்லிற்று; ச்ருத்யந்தரத்திற் சொல்லுகிற ஆகாச வாயுக்களினுடையவும் அவ்யக்த மஹதஹங்காராதிகளினுடையவும் உத்பத்தி தானும் சொல்லிற்றில்லையிறே. ஆகையால் தேஜோபந்நமாத்ரகதநம் (तेजोऽबन्नमात्रकथनम्) தத்வாந்தரங்களுக்கும் உபலக்ஷணமானாப் போலே த்ரிவ்ருத்கரண கதநமும் பஞ்சீகரணத்துக்கு முபலக்ஷணம்." என்று.

75. மேலே ஈச்வர ப்ரகரணத்திலேயே (40) "இவன் தான் *முந்நீர் ஞாலம் படைத்த வெம்முகில் வண்ணனே* யென்கிறபடியே ஸவிக்ரஹனாய்க் கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணும்" என்று மூலத்தி லருளிச் செய்யப்பட்டுள்ளது. ஈச்வரன் ஜகத்ஸ்ருஷ்டி பண்ணும்போது விக்ரஹ விசிஷ்டனாய்க் கொண்டே பண்ணுகிறானென்று திருவுள்ளம் பற்றின பிள்ளைலோகாசார்யர் இவ்விஷயத்திற்கு *முந்நீர் ஞாலம் படைத்த வெம்முகில் வண்ணனே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை ப்ரமாணமாகக் காட்டி யருளினாராயிற்று. முகில்வண்ணனென்கிறதற்கு இங்ஙனே பூர்வாசார்யர்கள் வியாக்கியானமிட்டிருந்தா லொழிய இவ்விடத்திற்கு இது ப்ரமாணமாகத் தகுதியில்லை. பூர்வாசார்ய வியாக்கியானமோ இப்படியில்லை; வேறுவிதமாகவுள்ளது; அப்படியிருக்க. இந்த சந்தை ப்ரக்ருத விஷயத்திற்கு எங்ஙனே ப்ரமாணமாகும்? என்கிற சங்கை மணவாள மாமுனிகளின் திருவுள்ளத்திலே தோன்றிற்று; அதையும் அதன் பரிஹாரத்தையும் அருளிச் செய்திருப்பது பாரீர்; இங்கு வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—

"*முகில்வண்ணனென்கிற விது ஔதார்ய குணபரமாக வ்யாக்க்யாதாக்கள் பலரும் வ்யாக்க்யானம் பண்ணினார்களே யாகிலும், விக்ரஹ பரமாக இவரருளிச் செய்கையாலே இங்ஙனு மொரு யோஜனை யுண்டென்று கொள்ளவேணும்; ஒன்றுக்குப் பல யோஜனையு முண்டாயிறே யிருப்பது" என்று.

76. அதற்குமேலே (3-42.) "ஈச்வரஸ்வரூபந்தான் பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சாவதார மென்று அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும்" என்கிற சூர்ணைக்கு வியாக்கியான மருளிச் செய்தபின்,...... ..ஆகையால் விரோதமில்லை யென்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுகிறது. அந்த ஈச்வர ப்ரகரணத்தின் முதல் சூர்ணையில் "ஈச்வரன் அகிலஹேய ப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய்" என்று தொடங்கி எம்பெருமானுக்கு அநேக விசேஷணங்கள் ஸாதித்து வருமவர் "விலக்ஷண விக்ரஹயுக்தனாய் லக்ஷ்மீ பூமி நீளா நாயகனா யிருக்கும்" என்று (அந்த முதல் சூர்ணையைத்) தலைக்கட்டினார். உடனே முன்னம் தாமிட்ட விசேஷணங்களைத் தாமே முறையே விவரணம் செய்து வருகிறார். அதில் 'லக்ஷ்மீ பூமி நீளா நாயகனா யிருக்கும்' என்றது விவரிக்கப்படவேயில்லை. "விலக்ஷண விக்ரஹ யுக்தனாய்" என்ற ப்ரஸங்கத்திலே ஈச்வர ஸ்வரூபத்தை யெடுத்துக் கொண்டு அது பஞ்சப்ரகாரமென்று சொல்லி அந்த ஐந்து ப்ரகாரங்களை விவரித்து க்ரந்தத்தை ஸமாப்தி செய்து விட்டார்

பிள்ளைலோகாசார்யர் ; லக்ஷ்மீ பூமி நீளா நாயகத்வமாகிற விசேஷணம் விவரிக்கப்படாமலே நின்றுபோயிற்று. இது குறையல்லவா வென்று சங்கித்துப் பரிஹாரமுணர்த்துகிறார் மாமுனிகள். இவ்விடத்து வியாக்கியான பங்க்திகளிவை—'லக்ஷ்மீ பூமி நீளா நாயகனை யென்றத்தையு முபபாதித்து விட்டு பின்னை இது சொல்லா தொழிவா னென்னென்னில், அதில் உபபாதிக்க வேண்டுவது பணியில்லாமையாலும் *வைகுண்டேது பரே லோகே ஸ்ரீ ஸஹாயோ ஜநார்த்தந:, உபாப்யாம் பூமி நீளாப்யாம் ஸேவித: பரமேச்வர: *என்கையாலே மேல் சொல்லுகிற பரத்வத்திலே அர்த்தாத் உக்த (अर्थादुक्त) மா மென்னு மத்தைப் பற்றவும் தனித்து உபபாதித்திலர் ; ஆகையால் விரோதமில்லை'' என்று.

77. மேலே எடுத்துக்காட்டினவிடத்திலேயே மற்றொருவிளக்கமுமுள்ளது. பரத்வாதி பஞ்ச ப்ரகார விசிஷ்டத்வம் ஈச்வரனுடைய ஸ்வரூபத்திற்கா? அல்லது திவ்யமங்கள விக்ரஹத்திற்கா? என்றொரு விசாரம் விளைந்தது. அதை விரிவாக நிரூபித்து விரோதம் தோன்றும் படியைக் காட்டிப் பரிஹாரம் செய்தருளுகிறார் மணவாள மாமுனிகள் ; இவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் வருமாறு—"ஈச்வர ஸ்வரூப மென்கிற விடத்தில் ஸ்வரூப சப்தத்தாலே சொல்லுகிறது ஸ்வாஸாதாரண விக்ரஹத்தை யாதல்—விக்ரஹ விசிஷ்டமான ஸ்வரூபந் தன்னை யாதல். ஸங்க்ரஹேண இட்டருளின மற்றை யிரண்டு தத்வத்ரயப் படியிலும், ஒரு படியிலே திருமேனியும் அஞ்சுபடியா யிருக்கும்—பரத்வமும் வ்யூஹமும் விபவமும் அந்தர் யாமித்வமும் அர்ச்சாவதாரமும்' என்றும், மற்றைப் படியிலே 'ஈச்வர ஸ்வரூபம் ஹேய ப்ரதிபடமாய்' என்று தொடங்கி 'பத்நீ பரிஜந விசிஷ்டமா யிருக்கும்' என்றத்தை உபபாதித்த வனந்தரம் 'இதுதான் அஞ்சுபடியா யிருக்கும்' என்று இதம் சப்தத்தாலே ப்ரக்ருதமான ஈச்வர ஸ்வரூபத்தைப் பராமர்சித்து, அதுதான் பரத்வாதி ரூபேண பஞ்ச ப்ரகாரமா யிருக்குமென்றும் இவர் தாமே யருளிச் செய்கையாலே." என்று. இத்தால் விரோத சங்கா பரிஹாரம் செய்யப்பட்டபடி யென்னென்னில் ; ஈச்வர ஸ்வரூப மென்றது—ஸ்வாஸாதாரண விக்ரஹத்தைச் சொன்னதாகவு மாகலாம், விக்ரஹ விசிஷ்டமான ஸ்வரூபத்தைச் சொன்ன தாகவு மாகலாம் என்று.

78. அவ்விடத்திலேயே அதற்குமேலே (44) "வ்யூஹமாவது ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும் ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகவும் உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும் நிலை" என்கிற சூர்ணையினால் வ்யூஹம் மூன்று விதமென்று தெரிவிக்கப்பட்டது. மேலே (53) "நித்யோதித சாந்தோதிதாதி பேதமும்" என்றருளிச் செய்யுமிடத்தில் சாந்தோதித ஸம்ஜ்ஞகரா யிருக்கிற வ்யூஹ வாஸுதேவர் தெரிவிக்கப்பட்டாராகிறார். இதனால் வ்யூஹம் நான்கு வகை யென்றதாகத் தேறுகிறது. ஆக, ஓரிடத்தில் மூன்றுவகை யென்பதும், மற்றோரிடத்தில் நான்கு வகை யென்பதுமான விரோதம் காண்கிறது. மணவாளமாமுனிகள் இங்கே யருளிச் செய்வது பாரீர் ;—வ்யூஹங்கள் நாலென்றும் மூன்றென்றும் சாஸ்திரங்களிலே சொல்லும் ; நாலுமுண்டாயிருக்க மூன்றென்கிறது வ்யூஹ வாஸுதேவ ரூபத்துக்கு பரரூபத்திற் காட்டில் அநுஸந்தேய குண பேதமில்லாமையாலே யென்று அபியுக்தர் சொல்லுகையாலே இவர் கீழ் வ்யூஹத்ரய மென்றருளிச் செய்ததுக்கும் இங்கு வ்யூஹ வாஸுதேவ ருண்டாக வருளிச் செய்ததுக்கும் விரோதமில்லை." இது (53) சூர்ணையின் வியாக்கியானத்தில் காணும் ஸ்ரீஸூக்தி. (44) சூர்ணையின் வியாக்கியானத்திலும் (முடிவில்)—"*சதுர்விதஸ் ஸ பகவாந்* என்கிறவிடத்தில் சதுர்விதமாகச் சொல்லிற்று வாஸுதேவனையும் கூட்டுகையாலே" என்றருளிச் செய்துள்ளார்.

79. கீழே உதாஹரித்த தத்வத்ரய (53) சூர்ணையிலேயே "ஷட்த்ரிம்சத்பேதபிந்நமான பத்மநாபாதி விபவமும்' என்றுள்ளது. இதனால் பத்மநாபாதி விபவங்கள் முப்பத்தாறென்று காட்டப்பட்டது. இது "षट्त्रिंशद्भेदभिन्नास्ते पद्मनाभादिकास्सुराः—ஷட்த்ரிம்சத்பேதபிந்நாஸ்தே பத்மநாபாதிகாஸ் ஸுரா:" என்ற ப்ரமாணத்திற்குச் சேர்ந்ததே. இங்கே மணவாளமாமுனிகளின் வியாக்கியானம்—

"* विभवाः पद्मनाभाद्याः त्रिंशच्च नव चैव हि ... ... त्रिंशच्च नव चैवेति पद्मनाभादयो मताः *" என்று முப்பத்தொன்பதாக அஹிர்புத்ந்ய ஸம்ஹிதாதிகளிலே சொல்லிற்றே யாகிலும், விஷ்வக்ஸேந ஸம்ஹிதையிலே முப்பத்தாறாகச் சொல்லியிருக்கையாலே இவர் ஷட்த்ரிம்சத்பேத பிந்நமென்றதில் குறையில்லை; இனி அந்த முப்பத்தொன்பதிலே மூன்றைக் குறைத்துக்கொள்ளுகையிறே யுள்ளது. அவையாவன கபில தத்தாத்ரேய பரசுராம ரூபமான ஆவேசாவதாரங்கள்" என்று.

இத்தால் முப்பத்தாறென்றும் முப்பத்தொன்பதென்றும் சொன்னவற்றுக்கு ஸமந்வயம் காட்டியருளினாராயிற்று. இனி ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்திலே சிறிது சேல்வோம்.

80 ஆசார்ய ஹ்ருதயத்தில் (50) "இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே; பண்ணார் பாடல் பண்புரை யிசைகொள் வேதம் போலே" என்ற சூர்ணையில் *பண்ணார் பாடலித்யாதி வாக்யத்தினால் திருவாய்மொழிக்கு ஸாமவேத ஸாம்யம் கூறப்படுகிறது. இங்கே மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின் :—

"வ்யாக்க்யானங்களில் *பண்புடை வேதம் என்றெழிய *பண்புரை வேதமென்று பாடமும் *இசை கொள் வேத மென்கிறதுக்கு ஸாமவேத பரத்வமும் கண்டதில்லையே யாகிலும் ஆப்ததமரான இவர் இப் ப்ரபந்தத்திலே இப்படி யருளிச் செய்கையாலே இப்படியும் கொள்ளவேணும்." என்று.

மஹான்களின் ஸ்ரீ ஸூக்திகளில் பரஸ்பர விரோத சங்கை பண்ணலாகாதென்றவாறு.

81. ஆசார்ய ஹ்ருதயம் இரண்டாம் ப்ரகரணத்தில் ஆழ்வார்க்கு விளைந்துள்ள பரம பக்தியானது பகவந் நிர்ஹேதுக க்ருபையினாலத்தனை யல்லது கர்மஜ்ஞான பக்திகளாகிற ஸாதனங்களின் அநுஷ்டானத்தினாலன்று என்பதைப் பல சூர்ணைகளினால் பரக்க உபபாதித்து வருகிறார் மூலகாரர்; யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகம் என்று சொல்லப்படுகிற ஸுக்ருதாபாஸங்கள்கூட ஆழ்வாரிடமில்லை யென்று பரக்க வுபபாதித்தார். (107) "முந்நீர் வாழ்ந்தார் சூட்டுங் கோவை யாழி யென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வபர வ்ருத்தாந்தர்க்கு யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்" என்னும் சூர்ணை முக்கியமாகக் காணத்தக்கது. ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்து அருளிச் செய்திருக்கிற ஆழ்வார்க்கு அஜ்ஞாதமான தொன்று மில்லாமையாலே தம்மை எம்பெருமான் அங்கீகரிப்பதற்கு மூலமான ஏதேனுமொரு ஸுக்ருதமுண்டாகில் அது ஆழ்வாருடைய புத்திக்கு எட்டாமலிராது; எட்டியே யிருக்கும். அதை அருளிச் செய்யாது விடமாட்டாராழ்வார்; அப்படியருளிச் செய்யக் காணாமையாலும், கேவல நிர்ஹேதுக பகவத் ப்ரஸாதத்தையே வெளியிடவல்ல ஸ்ரீஸூக்திகளையே ஆழ்வாரருளிச் செய்திருக்கக் காண்கையாலும் யாத்ருச்சிகம் முதலான ஆபாஸ ஸுக்ருதங்களும் இவர்க்கு இல்லையென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. இதற்குமேல் மூன்று சூர்ணைகளுக்கு அப்பால் "மாதவன் மலை நீர் நிழலென்று ஏறிடுமது வ்யாவ்ருதத்யுக்தி, அந்யார்த்தம் அபுத்திபூர்வம், அவிஹிதம், ஃபலவிஸத்ருசம் ஃபலாந்தரஹேது"

என்கிற சூர்ணை அருளிச்செய்யப்பட்டுள்ளது. இத்தால் என்ன தெரிவிக்கப் படுகிறதென்றால், ஆழ்வாருடைய இரண்டு பாசுரங்களை எடுத்துக் காட்டி இவர்க்கு யாத்ருச்சிக ஸுக்ருதமுண்டு என்று தெரிவிக்கப்படுகிறது. எங்ஙனே யென்னில்; திருவாய்மொழியில் (2–7–3) *மாதவ னென்றதே கொண்டு என்னை யினி யிப்பாற் பட்டது, யாதவங்களும் சேர்கொடேனென்று என்னுள் புகுந்திருந்து* என்கிற பாசுரத்தினால் மாதவன் என்கிற திருநாமத்தைத் தாம் அஹ்ருதயமாகச் சொன்னதாகவும், அவ்வளவிலே இத்தையே பெரிய ஹேதுவாகக் கொண்டு எம்பெருமான் தம்மை விஷயீகரித்துத் தம்முள்ளே புகுந்திருந்து ஸகல கர்மங்களையும் போக்கினதாகவும் சொல்லப்படுகிறது. மேலே *திருமாலிருஞ் சோலைமலை யென்றே னென்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்* (10–7–1) என்கிற பாசுரத்தினாலே—திருமாலிருஞ்சோலைமலை யென்று அவனுடைய திவ்யதேசத்தின் பெயரை அஹ்ருதயமாகத் தாம் சொன்னதாகவும், அவ்வளவிலே அவன்தானுகந்து வர்த்திக்கிற திருமலையின் பெயரை விரும்பிச் சொன்னதாகக் கொண்டு பிராட்டியோடே கூடவந்து தம்முள்ளே பரிபூர்ணமாகப் புகுந்ததாகவும் சொல்லிற்று. ஆக இவ்விரண்டு பாசுரங்களையும் மூலகாரர் எடுத்துக் காட்டி இப்பாசுரங்களிற் சொன்ன மாதவன் மலையென்னு முக்திகளுக்கு அஹேதுத்வத்தை யருளிச்செய்கிறார். அது இருக்கட்டும். மேலே யெடுத்துக் காட்டிய இரண்டு பாசுரங்களினாலும் ஆழ்வார்க்கு யாத்ருச்சிகம் முதலான ஸுக்ருதமுண்டு என்று காட்டப்பட்டு விட்டதல்லவா? 107 சூர்ணையில் யாத்ருச்சிகாதிகள் இல்லையென்று ஸாதித்துவிட்டு 111 சூர்ணையில் அவை யிருப்பதாகக் காட்டினது பரஸ்பர வ்யாஹதமென்று சங்கிக்கக் கூடியது. இவ்விடத்து வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள் இந்த சங்கையை உத்பாவனம் பண்ணி பரிஹாரம் காட்டியிருப்பதை இனி யுணர்த்துகிறோம். மாமுனிகளின் திவ்யஸ்ரீஸூக்திகள் இவை—

> "கீழே 'யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்' என்றதுவும் இங்கே *மாதவனித்யாதியாலே அவனேறிடத் தக்கவை சிலவுண்டாக இவர் தம்முடைய உக்தியாலே கண்டெடுத்துக் கழிக்கிறவிதுவும் தன்னில் சேரும்படி யெங்ஙனே யென்னில்; யாத்ருச்சிகாதிகள்தான் பலவுமுண்டாகையாலே அத்யுத்கடங்களாய் மஹா பலத்துக்கு உறுப்பாய் வந்து விழுமவையும் ஆபாஸங்களா யிருக்குமவையு முண்டாகையாலே அத்யுத்கடங்களாய் அவனுக்கு ஹேதுவாகக் கொள்ளலாம்படி யிருக்குமவற்றைக் கீழே சொல்லிற்றாக்கி, ஆபாஸங்களாய் அவனாரோபித்துக் கொள்ளத்தக்கவற்றை இங்கே சொல்லிற்றென்று விபஜித்துக் கொள்ளுமளவில் விரோதமில்லை" என்று.

இந்த ஸ்ரீஸூக்திகளின் பொருளை நாம் விவரிக்கவேண்டிய தில்லை யன்றோ. விரோத சங்கையும் சங்காபரிஹாரமும் அமைந்திருக்கு மழகை புத்திமான்கள் அநுபவிப்பது.

82. இங்ஙனே நாமெடுத்துக் காட்டத்தக்க ஸ்ரீ ஸூக்திகள் மற்றும் பலபல. இத்தகைய ஸமந்வய ஸ்ரீ ஸூக்திகளை மணவாளமாமுனிகளின் வியாக்கியான திவ்யக்ரந்தங்களிலன்றி மற்ற எந்த க்ரந்தத்திலும் காணமுடியாதென்பது சிலாலிகிதம். "அல்லும் பகலு மனுபவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான் நல்ல மணவாள மாமுனிவன்" என்று முன்னோர்கள் திருவாய்மொழி நூற்றந்தாதிக்கு இட்ட தனியன் அந்த நூற்றந்தாதியைமட்டும் பற்றியதன்று; மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தி ஸமுதாயத்தைப் பற்றினது. மாமுனிகளைப்போல் பொருளையும் விவரிக்க வறியாமல் சொற்களையும் அடுக்கத் தெரியாமல் க்ரந்த மெழுதினவர்கள் பலருளர். வியாக்கியான மெழுத எழுத்தாணியைக்

கையிற் கொள்ளவேணுமானல் அதற்கு மணவாளமாமுனிகளொருவர் தவிர மற்றையோர் முன் வருவது மஹத்தான ஸாஹஸமென்றே நாம் அறுதியிட்டிருப்பது. மாமுனிகளின் ஸம்ப்ரதாய வைலக்ஷண்யமும் அவருடைய திவ்ய ஸூக்தி மாஹாத்ம்யமும் ஸ்ரீஸூக்தி ப்ரவசன வைபவமும் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறொருவர்க்கு அமைந்திலது. இந்த ப்ரசம்ஸை இப்போது எதற்காகவென்று கேட்கக் கூடும். கேண்மின். இந்த த்ரௌபதீ விவாதத்தை முதன் முதலாகக் கிளப்பி வியாஸ மெழுதியவர்கள் தங்கள் வ்யாஸத்திற்கு விரோதபரிஹார மென்று பெயரிட்டனர். பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீ வசநபூஷண ஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் விரோதமிருப்பதாக வைத்து, தாங்கள் அதற்குப் பரிஹாரம் செய்வதாக வந்தார்கள். விரோதத்திற்கு ஸ்வல்பமான அவகாசமிருந்தாலும் மாமுனிகள் எடுத்துப் பரிஹரியாமல் விட்டிடுவரா? என்பதை அவர்கள் ஆலோசியாதது மாமுனிகளின் வியாக்கியான சைலியை அறியாமையினாலன்றோ. தங்களுக்குத் தோன்றுகிற விரோதமும் பரிஹாரமும் மாமுனிகளுடைய மதிக்கு கோசரியாததென்றன்றோ எண்ணி விட்டார்கள். த்ரௌபதிக்குப் பரிபவம் பண்ணினவளவோடு நில்லாமல் மணவாள மாமுனிகளின் ஸூக்திகளுக்கும் பரிபவம் விளைத்தபடியன்றோ விது.

83. ஒரு சதுச்சாஸ்த்ரபண்டிதர் ஸ்ரீ பாஷ்ய ப்ரவசநம் பண்ணுகின்றார். * லோகவத்து லீலாகைவல்யம் * என்கிற ஸூத்ரபாஷ்ய ப்ரவசநம் நடைபெறுகிறது. "ஸ்ருஷ்டேஃ ப்ரயோஜநம் கேவலா லீலைவ" என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்தியை அவர் விசிகித்ஸாலேசமுமின்றிக்கே நிர்வஹித்துப் போராநின்றார். அவரை நோக்கி 'லீலையாவது என்ன?' என்று கேட்டோம். விளையாட்டு என்றார். சாஸ்த்ரஜ்ஞரான நீர் ஸம்ஸ்க்ருத பாஷையாலே அதை நிர்வசிக்கலாகாதோ? என்றோம். தலைகாலில்லாதபடி எதையோ சொன்னார். அவர் மணவாள மாமுனிகள் திறத்து மாச்சரியங்கொண்டிருந்தார். அவர்க்கு நாம் தத்வத்ரயத்தில் (162) * ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கேவல லீலையென்னுமிடத்து மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக் கையில் தந்தோம். திருப்பித் திருப்பிப் பார்க்கிறார்; ஒன்றும் விள்ளவில்லை யவர்க்கு. பங்க்திகளின்மீது பொருளை உபபாதித்துக் காட்டினோம். "மணவாள மாமுனிகளைப்போல் மிகத் தெளிவுபட சாஸ்த்ரார்த்தங்களை நிரூபிக்கவல்லார் நபூதோ நபவிஷ்யதி" என்று கைகூப்பிச் சென்றார். பாஷ்யகாரர் எழுதியருளின ஸம்ஸ்க்ருதவாக்யமும், அதையடியொற்றிப் பிள்ளை லோகாசாரியர் அருளிய [மேலே காட்டிய] வாக்யமும் சிறிது திருத்தப்பட்டாலொழிய ஸமந்விதமாகாதென்று மாமுனிகளின் உபபாதநம். காலாந்தரஸம்பாவி ப்ரயோஜநவிசேஷநிரபேக்ஷேண தாத்காலிகஸந்தோஷாயகேவலம் க்ரியமாணோ வ்யாபாரோ லீலா என்று பரிஷ்கரித்துக் காட்டியருளி, இங்ஙனேயாமிடத்து ஸ்ருஷ்டிரூபவ்யாபாரஸ்ய....வ்யாபாரஃ ப்ரயோஜநம் என்று கூறினதாகத் தேறுகிறதென்றும், இது அநந்விதமென்றும் காட்டியருளி, உபபந்நமாம் வழியையும் காட்டியுள்ளார்;

"லீலையாவது தாத்காலிகஸந்தோஷமொழிய காலாந்தரத்தில் வருவதொரு பலத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும் (மூலத்தில்) ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜந மென்று ஸ்ருஷ்டிரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜநமாகச் சொல்லுகையாலே தாத்காலிகஸந்தோஷத்தைச் சொல்லிற்றாகக்கடவது."

என்றுள்ள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திபோல் எங்கேனுங் கண்டதுண்டோ? இங்கு சங்கை யென்ன? ஸமாதானமென்ன? என்றுகூட அறியமாட்டாத ப்ரவக்தாக்கள் எத்தனைவருளர்!

"ஸம்ரக்ஷிதஃ ஹரிவததஃ கேவலம் ஸ்ரீயா" என்னலாமேயொழிய "ஸம்ரக்ஷணப்ரயோஜநம் கேவலம் ஸ்ரீயா" என்னத்தகாது என்று இன்னமும் அறியப்பெருதார் எத்தனைவருளர்! இங்ஙனே ஒவ்வொரு விஷயத்தையும் வாக்கையும் ஆழ்ந்து கூர்ந்து ஆராய்ந்து வியாக்கியானித்தருளும் மாமுனிகளின் மேதைக்கு கோசரமாகாத விரோதம் தமக்குஸ்புரித்ததாக வுரைக்க ஒருவர் முன்வருவது மிகப் பரிஹாஸ்யமன்றே.

84. ப்ரக்ருதவிவாதிகளில் இருவகுப்புள்ளதாகக் காண்கிறது. ஸ்ரீவசனபூஷண ஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் விரோதமுள்ளதாக வைத்து, வஸ்த்ரார்த்தமான த்ரௌபதியின் ப்ரபத்தி திருநாமஸங்கீர்த்தனத்தாலோ புருஷகாரமின்மையாலோ அடியோடு பலிக்காமற்போய்விட்டது என்று வாதிப்பது ஒரு வகுப்பாம். ப்ரபத்தி பலிக்காமல் போக வில்லை, பலித்தே விட்டதென்றும், ஆனால் உடனே பலிக்கவில்லை, வெகுகாலம் கழித்தே பலித்ததென்றும், தற்காலத்தில் புடவை சுரந்தது ப்ரபத்தியினாலன்று. திருநாமத்தினால் தானென்றும் வாதிப்பது மற்றொரு வகுப்பாம். ஹந்த! உபாவபி வக்ஷ்யே வாதினௌ. விவேகிகள் இங்குச் சுருக்கமாகவுணரலாம். "த்ரௌபதிக்குப் பலம வஸ்த்ரம்" என்று ஸ்ரீஸூக்தியேயொழிய "வஸ்த்ராதிகள்" என்றில்லை. பஹாஸதஸ்ஸிலே மாநஹானியாகாத படி காத்தருளவேணுமென்று இஃதொன்றுக்காகவே த்ரௌபதி ப்ரபத்தி பண்ணிற்று. கண்ணபிரான் தன்னுடைய சாதுர்யத்தினால் வஸ்த்ரவர்த்தநம் பண்ணிக்கொடுத்துக் காத்தன னத்தனை. த்ரௌபதி வஸ்த்ரத்தைக் கோரவில்லை, கோரப்ரஸக்தியுமில்லை. அந்த ஸமயத்தில் மானரக்ஷணமொன்று தான் அவள் விரும்பக் கூடியதும், விரும்பினதும். அது உடனே பலித்ததாகையாலே ப்ரபத்தி பலிக்கவில்லை யென்கிற வாதமும் பிசகு, காலாந்தரத்திலே பலித்ததென்கிற வாதமும் மிகப் பிசகு. த்ரௌபதி வஸ்த்ரத்தை அபேக்ஷித்திருந்தாலன்றோ "த்ரௌபதி விரும்பிய பலன் என்று அர்த்தமேயொழிய பெற்ற பலன் என்று அர்த்தமன்று" என்று வாதிக்க இடமுள்ளது. மானஹாநிபரிஹாரம் என்கிற தாத்பர்யத்திலே "த்ரௌ பதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்றருளிச் செய்யப்பட்டதென்றே சொல்லித் தீரவேணும். ஏவஞ்ச, த்ரௌபதி கோலின பலன் என்பதும் த்ரௌபதி பெற்ற பலன் என்பதும் பரியா யமேயாயிற்று. இதில் க்ரந்த விஸ்தாரமுள்ளதெல்லாம் வீணா.

85. "கரிவரமவரம்ஹிதே ஹரிவதஃ த்வாரயைநஃ" என்ற பட்டர் ஸ்ரீஸூக் தியைக் கண்டவொருவர் கஜேந்திராழ்வானை எம்பெருமானும் ரக்ஷித்திலன், திருவாழியாழ் வானும் ரக்ஷித்திலன், ப்ரபத்தியும் ரக்ஷிக்கவில்லை, த்வாரதேவி யென்பாளொருத்தியே ரக்ஷித்தா ளென்று சொல்லிக்கொண்டிருப்பராம். அதுபோல இவர்களும் த்ரௌபதியை எம்பெருமா னும் ரக்ஷிக்கவில்லை, ப்ரபத்தியும் ரக்ஷிக்கவில்லை, திருநாமமொன்றே ரக்ஷித்தது என்று சொல் லிக்கொண்டு காலம் கழிப்பதில் யார்க்கும் ஹாநியில்லை. குவலயாநந்தத்தில் அற்புதமான சுலோகமொன்று; "க்ஷேமம் தஸ்யா ஜீவதி க்ஷேமம் ப்ருச்சாமி ஜீவதீத்யுக்தம் । புநரபி ததேவ கதயஸி ஜீவதீம் கிம் ம்ருதாம் நு கதயேயம் ॥" என்பது. ஒருகாமுகன் தன் மனைவி யைக் குறித்து நண்பனை நோக்கி 'அவள் க்ஷேமமாயிருக்கிருளா? என்று கேட்டானும். அதற்கு அவன் 'அவள் ஜீவித்திருக்கிருள்' என்ருனும். அதன்மேல் 'அப்பா! நான் அவளுடைய குசலத்தைப் பற்றிக் கேட்கிறேன்' என்ருனும் காமுகன். ஜீவதியென்று சொன்னேனே நான் என்ருனும் நண்பன். மறுபடியும் பழம்பாட்டையே பாடுகிருயே என்ருனும் காமுகன்; பிழைத்திருக்கிற அவளை இறந்தவளாக எங்ஙனம் சொல்லுவேனென்ருனும் நண்பன். ஓயாத வினு விடைகள் சுவை மிக்கவை இங்ஙனே பலவுண்டு. இவர்களுடைய பழம் பாட்டுக்கள் சுவையற்றவை போதுமே. .... ... நான்காம் பரிச்சேதம் முற்றிற்று.

ஸர்வஜ்ஞலோக குருஸூக்தி ஸர்வஸ்வத்தில்

ஐந்தாவது பரிச்சேதம்.

# உக்தி சமத்கார வைகரிகள்.

86. ஸம்ஸ்க்ருத கவிதைகளிலும் தமிழ்க் கவிதைகளிலும் பொருளின்பங்களைப் போலவே சொல்லின்பங்களையும் பலபல அனுபவிக்கின்றோம். சொல்லின்பங்களே உக்தி சமத்கார மெனப்படும். வஸ்து ஸ்திதி ஒருவாறிருக்க அதனையறிந்திருந்தும் உள்ளபடி யுரையாமல் வேறொருபடியாக வுரைத்தல் உக்தி சமத்காரம். கார்ய காரணங்கள் என்று இரண்டு உள்ளன. ஒரு காரியத்திற்கு இன்னது காரணமென்று பிரசித்தமாயிருக்கச் செய்தேயும் உண்மையான காரணத்தைவிட்டு வேறொரு காரணத்தைக் கூறுதல் உக்தி சமத்காரமென்று கொள்க. இங்ஙனே கூறுதற்குப் பிரயோஜனம் ஆங்காங்கு ஒவ்வொன்று இருக்கும். ஆனாலும் முக்கியமாகக் கவியின் சாதுரியமே ரஸிகர்களால் அநுபவிக்கத் தக்கதாகும். இந்த வகையில் முன்னம் பல பல உக்தி ரஸங்களை இங்குக் காட்டி ரஸிகர்களை இன்பக் கடலில் ஆழ்த்த விரும்புகின்றோம். முடிவாக "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமாஹே" என்கிற பிள்ளை லோகாசாரியரின் உக்தி சாதுர்யத்தை யநுபவித்துத் தலைக் கட்டுவோம்.

87. பிள்ளைப் பெருமாளையங்கார் திருவரங்கக் கலம் பகத்தில் "ஒரு நாலு முகத் தவனோடு உலகீன்றாயென்பர், அது உன் திருநாபி மலர்ந்த தல்லால் திருவுளத்தி லுணராயால்" என்றும், "மேருகிரியவுணனுடல் மிடல் கெடுத்தாயென்பர், அதுன் கூருகிரே யறிந்ததல்லால் கோவே! நீயறியாயால்" என்றும் கூறியுள்ளார். பகவான் செய்யும் பிரபஞ்ச ஸ்ருஷ்டியையும், நரஸிம்ஹ மூர்த்தி செய்தருளின ஹிரண்யாஸுர வதத்தையும் இங்கு அநுபவிக்கிறார் திவ்வியகவி. 'ஒரு நாலு முகத்தவனோடு" என்று தொடங்கும் முந்தின வாக்கியத்தில் 'பிரானே! நான்முகக் கடவுளையும் மற்றும் உல கங்களையும் நீ படைத்ததாகக் கூறுகின்றார்கள்; அஃது உண்மையல்ல; இவை உனது உந்தி மலர் செய்த செயலேயல்லது இது பற்றி நீ நெஞ்சிலும் நினைப்பிட்டதில்லை' எனப்படுகிறது. இனி "மேருகிரியவுணனுடல்" என்று தொடங்கும் மற்றொரு வாக்கி யத்தில், 'நரசிங்க மூர்த்தியே! இரணியாசுரனுடைய வுடலை நீ பிளந்ததாகக் கூறுவர்; அஃது உண்மை யன்று; அவ்விரணிய வதம் உனது திருக்கையிலுள்ள திருநகங்கள் செய்ததே யன்றி அதைப் பற்றி உனக்கொன்றும் தெரியாதன்றோ' எனப்படுகிறது.

88. உபநிஷத்தில் "सोऽकामयत। बहु स्यां प्रजायेयेति। स तपोऽतप्यत। स तपस्तप्त्वा। इदं सर्वमसृजत —ஸோகாமயத. பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி. ஸ தபோதப்யத. ஸ தபஸ் தப்த்வா. இதம் ஸர்வமஸ்ருஜத" என்று ஓதப்பட்டிருப்பதை ஐயங்கார் அறி யாரோ? நான்முகனைப் படைத்ததும் உலகங்களைப் படைத்ததும் ஸத்யஸங்கல்ப னான ஸர்வேச்வரனே யென்பது ஸகலப்ரமாண ஸித்தமாயிருக்க, 'இதைப் பற்றிப் பகவானுக்கு ஒன்றும் தெரியாது, திருநாபி மலர்ந்ததத்தனையே' என்று பேரறிஞர் கூறினால், 'இஃது அநாயாஸமாக நடந்த காரியமே யொழிய வேறில்லை' என்று தெரி விப்பதற்கு மேற்பட வேறொன்று இங்கு விவக்ஷிதமாகத்தகுமோ? இனி இரண்டா வது விஷயம். "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக் காய்ந்து, இங்கில்லையா லென்று இரணியன் தூண்புடைப்ப, அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றிய என் சிங்கப்பிரான்" என்பது முதலான பல்லாயிரம் பாசுரங்களினாலும் புராண வர லாறுகளாலும் இரணியனை வதைத்தது எம்பெருமானே யென்று பிரசித்தமாயிருக்க "அது உன் கூருகிரே யறிந்ததல்லால் கோவே! நீ யறியாயால்" என்று அறிஞர் தலை வர் கூறினால் இதுவும் அவலீலையாக நடந்த காரியமென்று தெரிவிக்கத் தோன் றிய உக்தி சமத்காரமே யொழிய வேறன்றே.

89. இனி ஆழ்வாரருளிச் செயற்கடலிலிறங்குவோம். திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (1-1-9)*குலந்தருஞ் செல்வந்தந்திடுமென்கிற பாசுரம் யாவருமறிந்ததே; "நாராயணாவென்னும் நாமம் குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயராயினவெல்லாம் நிலம் தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநில மளிக்கும் வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்றதாயினுமாயின செய்யும்" என்று ஸ்ரீமந் நாராயணத் திருநாமமானது அபரிமிதமான பலன்களைக் கொடுக்குமதாகக் கூறப்பட்டுள்ளது. திருநாமம் கொடுக்குமென்றது திருநாம ஸங்கீர்த்தனம் கொடுக்கு மென்றதாகும். திருநாமமே கொடுக்குமென்றாலும் திருநாமோச்சாரணம் கொடுக்கு மென்றாலும் இவை தாமே ஸ்வதந்திரமாக எப்படி கொடுக்குமென்று கேள்வி பிறந்தே தீரும். திருநாம ஸங்கீர்த்தனத்தினால் ப்ரஸன்னனான எம்பெருமான் கொடுத்தருள்வன் என்ன வேண்டும் ஸ்தானத்திலே இங்ஙனே சொல்லிற்றென்று தீர்ந்ததாகும். ஆக இதுவும் உக்தி சமத்காரத்தில் சேர்ந்ததேயாம்.

90. பேயாழ்வாருடைய பாசுரமொன்றினால் இக்கருத்தை உய்த்துணரலாம். அவ்வாழ்வார் தமது திருவந்தாதியில் "தேசுந் திறலும் திருவுமுருவமும், மாசில் குடிப் பிறப்பும் மற்றவையும் பேசில்—வலம் புரிந்த வான்சங்கங் கொண்டான் பேரோத, நலம் புரிந்து சென்றடையும் நன்கு" என்றருளிச் செய்கிறார். தேசு திறல் திரு முதலான பலன்கள் எம்பெருமானுடைய திருநாமங்களை யோதுவதனால் கிடைக்குமென்று இப் பாசுரத்தில் தெரிவிக்கப்படுகிறது. இங்ஙனே சொல்லுவதில் யாதொரு கேள்வியும் தோன்ற இடமில்லை. திருநாமமே கொடுக்கின்றதென்பதில்தான் கேள்வி பிறக்கின்றது. அங்ஙனே சொல்லுவது உக்தி சமத்காரமென்று முடிந்தது.

91. தேவதத்தன் ஸ்தாலியில் சமைக்கிறான், யஜ்ஞதத்தன் விறகைக் கொண்டு சமைக்கிறான் என்ன வேண்டு மிடங்களில் 'स्थाली पचति, काष्ठं पचति —ஸ்தாலீ பசதி, காஷ்டம் பசதி' என்பதுண்டு; இது போன்ற பிரயோகங்களை சாஸ்த்ரஜ்ஞர்கள் எடுத்துக் காட்டுவர்கள். இவையும் உக்தி சமத்காரத்தில் தான் சேரும். 'இராமன் விட்ட அம்புகள் அரக்கர்களது சிரங்களை யறுக்க வில்லை, அரக்க மாதர்களின் மங்கல நாண்களையே யறுத்தன' என்று திவ்ய கவி பாடியுள்ளார். உண்மையில் ராம பாணங்கள் அரக்கர்களின் தலைகளை யறுக்காமல் அரக்க மாதர்களின் மங்கல நூலை எங்ஙனே யறுக்குமென்று கேட்டால் 'உக்தி சமத்காரமே இது' என்று சொல்லித் தீரவேண்டும்.

92. ஸம்ஸ்க்ருத கவிதைகளில் சிறிது இறங்குவோம். உத்தர ஸ்ரீராமாயணத்தில் சம்பூக வத கதையொன்று உளது. ஸ்ரீகுலசேகராழ்வாரால் பெருமாள் திருமொழியில் *செறிதவச் சம்புகன்றன்னைச் சென்று கொன்று* என்றநுஸந்திக்கப் பட்டது அதுவே. பவ பூதி மஹாகவி தானியற்றிய உத்தர ராமசரித நாடகத்தில் இக் கதை கூறுமிடத்து உள்ள சுலோகம் காண்மின்.

"रे हस्त दक्षिण मृतस्य शिशोर्द्विजस्य जीवातवे विसृज शूद्रमुनौ कृपाणम् ।
रामस्य गात्रमसि निर्भरगर्भखिन्न सीताविवासन पटो करुणा कुतस्ते ॥

ரே ஹஸ்த! தக்ஷிண! ம்ருதஸ்ய சிசோர் த்விஜஸ்ய ஜீவாதவே விஸ்ருஜ சூத்ரமுனௌ க்ருபாணம்;
ராமஸ்ய காத்ரமஸி நிர்ப்பரகர்ப்பகிந்ந ஸீதாவிவாஸந படோ கருணா குதஸ்தே?

என்பது. தவம் புரிவதற்குத் தகாத ஜாதியிற் பிறந்த சம்புகன் தண்டகாரணியத்தில் தவம் புரிந்ததனால் அவ்வநீதியின் பயனாக அயோத்தியில் ஒரு அந்தணனுடைய மகன் அகால ம்ருத்யுவை யடைந்திட, அவ்வந்தணன் இராமபிரானிடத்தே வந்து கதறிக் கதறி யழுது நிற்க, தவம் புரிகின்ற சம்புகனைக் கொன்றிட்டால் இந்த சிசு பிழைத்தெழும் என்றுணர்ந்த பெருமாள் அவனை வதைக்கத் தண்ட காரணியத்திற்குப் புறப்பட்டார். அப்போது லோகாபவாத பரிஹாரார்த்தமாக கர்ப்பிணி (गर्भिणि) யான ஸீதா பிராட்டியைத் துறந்திருந்த ஸமயமாதலால் சோகஸாகரத்தில் ஆழ்ந்திருந்த பெருமாள்

அந்த சோகத்துடனே சம்புகவதத்திற்கு எழுந்தருள வேண்டியதாயிற்று. சம்புகனைக் கத்தியிட்டுக் கொல்லத் தொடங்கும்போது சொல்லுகிற சுலோகமிது. பெருமாள் தம்முடைய வலக்கையை விளித்துச் சொல்லுகின்றார். 'ஏ வலக்கையே! இறந்தொழிந்த அந்தண சிசுவை உயிர் மீட்பதற்காக இந்த சூத்ர முனிவன் மேல் கத்தியை விட்டெறி; நீயோ இராமனுடைய அவயவமாயிராநின்றாய்; பூர்ண கர்ப்பிணியான ஸீதா பிராட்டியைக் காட்டுக்குப் போகவிட்ட கொடியனான இராமனுடைய அவயவமான உனக்குக் கருணை ஏது? கண் பாராமல் கொன்றிடு' என்பது இந்த சுலோகத்தின் கருத்து. "பூர்ண கர்ப்பிணியான ஸீதாபிராட்டியைக் காட்டில் போகவிட்ட கொடியனான நான் கருணையற்று இதோ உன்னைக் கொல்லுகின்றேன்'' என்று சம்புகனை நோக்கிக் கூறியிருப்பர் பெருமாள். கவி தன்னுடைய மதி சமத்காரத்தாலே அந்த வார்த்தையை இங்ஙனே விந்யஸித்துள்ளார். அதாவது, பெருமாள் தம்முடைய திருக்கையை விளித்து 'இக்கொடியவன் மீது கத்தியை விட்டெறி' என்று கூறினதாக வைத்துள்ளார். கத்தியை விட்டெறிந்தது பெருமாளா? அல்லது அவருடைய திருக்கையா? என்று வினவினால், திருக்கையைக் கரணமாகக் கொண்டு பெருமாள் தாம் விட்டெறிந்தார் என்று உள்ளபடி கூறவேண்டியது கடமை. இங்குக் கவியின் சமத்காரம் ரஸிக்கத் தக்கதாகும். 'கரணமாகக் கொண்டு' என்றதைப் பற்றி மேலே சொல்லுவோம்.

93. விச்வகுணாதர்ச மென்னும் நூலில் கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களையநுபவிக்குமிடத்து விநோதமாக வொரு சுலோகம் பேசப்படுகின்றது. "चोरस्य चौर्यं जगति प्रसिद्धम् चौर्यस्य चौर्यं नतु दृष्ट पूर्वम्। चौर्याणि कार्याणि सकृत् स्मृतानि कृष्णस्य मुष्णन्तितमां तमांसि— சோரஸ்ய சௌர்யம் ஜகதி ப்ரஸித்தம் சௌர்யஸ்ய சௌர்யம் நது த்ருஷ்ட பூர்வம், சௌர்யாணி கார்யாணி ஸக்ருத் ஸ்ம்ருதாநி க்ருஷ்ணஸ்ய முஷ்ணந்திதமாம் தமாம்ஸி'' என்பதாக. இதனுடைய கருத்து யாதெனில்; கள்வமென்னும் செயல் கள்ளனிடத்திலுள்ள தென்பது தெரிந்ததே; கள்வத்தில் கள்வமிருப்பதாக நாம் எங்கும் கண்டதில்லை. ஆனால் கண்ணபிரானுடைய கள்வங்களிலே கள்வமிருப்பதாகக் காண்கிறோம். எப்படி யென்னில், அவனுடைய கள்வங்கள் நம்மால் நினைக்கப்பட்டவாறே அவை நமது தீமைகளை யெல்லாம் களவாடுகின்றனவன்றோ என்பது. சோரனான கண்ணன் செய்த சௌர்யம் வேறு, அந்த சௌர்யம் செய்த சௌர்யம் வேறு என்பதாக இங்குக் காட்டப் படுகின்றது. தயிர், பால், நெய், வெண்ணெய் முதலானவற்றைக் கண்ணன் களவு செய்தான்; அந்தக் களவுத் தொழில்களானவை நம்முடைய பாவங்களைக் களவு செய்கின்றன என்று சொன்னவிது விலக்ஷணமான உக்தி சமத்காரம். கண்ண பிரான் தன்னை நவநீத சோரனென்றும் கோபீ ஜந தஸ்கரனென்றும் சொன்னவர்களுடைய பாவங்களையெல்லாம் போக்குகின்றானென்பது இந்த சமத்காரோக்தியினால் தேறியதாகும். கீதையில் * जन्म कर्म च मे दिव्यं एवं यो वेत्ति तत्त्वतः। त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन—ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந.* என்று சொன்னதில் சமத்கார மேதுமில்லை; இதில் சமத்கார முள்ளது.

94. பிள்ளை லோகாசார்யர் * ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்கிற சரமச்லோகத்தின் பொருளை விவரித்தருளுகையில் "அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'' என்கிற விடத்திற்கு விவரணம் காட்டுகையில், "ணிச்சாலே நானும் வேண்டா நீயும் வேண்டா; அவை தன்னடையே விட்டுப் போங்காணென்கிறான்'' என்றருளிச் செய்துள்ளார். இது பொருந்துமா வென்று பார்க்க வேணும். 'நீயும் வேண்டா, நானும் வேண்டா' என்பதற்கு—ப்ரபத்தி செய்பவனான அர்ஜுனனும் வேண்டா; அதற்குப் பலனளிக்கின்ற கண்ணனாகிய தானும் வேண்டா என்பது பொருளாகத் தேறுகின்றது. இது எங்ஙனே சேரும்? இங்ஙனே யருளிச் செய்த பிள்ளை லோகாசாரியர் தாமே இந்த சுலோகத்தின் வியாக்கியானத் தொடக்கத்தில் "இதில் பூர்வார்த்தத் தாலே அதிகாரி க்ருத்யத்தை யருளிச் செய்கிறான், உத்தரார்த்தத்தாலே ஸ்வக்ருத்யத்தை யருளிச்

செய்கிறன் " என்றருளியுள்ளார். இவ்வுபாயத்துக்கு அதிகாரியானவன் செய்ய வேண்டுவதும் உபாயபூதனுன தான் இவனுக்குச் செய்யுமதும் உண்டென்று நன்கு காட்டப்பட்டது. இப்படி காட்டிவிட்டு 'நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப் போம்' என்றல் இதன்கருத்தை ஆழ்ந்தறியவேணு மன்றே. தன்னடையே விட்டுப் போங்காணென்றதற்கு அடுத்த சூர்ணை—" என்னுடைய நிக்ரஹ பலமாய் வந்தவை நானிரங்கினுல் கிடக்குமோ வென்கை " என்பது. இதற்கு அவதாரிகை யிடுகின்ற மாமுனிகள் " இப்படி யருளிச்செய்ததன் கருத்தை வெளியிடு கிருர்'' என்றிட்டு, மேலே

"பாபங்களாகிறன—குப்பையிலாமணக்குப் போலே யெழுந்து பாம்பு போலே மிடற்றை பிடிப்பதொன்றன்றிறே: சேதநன் பண்ணின கர்மங்கள் க்ஷணத்வம்ஸிக ளாகையாலே அப்போதே நசித்துப்போம்: அஜ்ஞனுகையாலே கர்த்தாவான இவனும் மறந்துபோக, ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனுய் ஒன்ருெழியாமல் உணர்ந்திருந்து ப்ராப்த காலங்களிலே தப்பாமல் நிறுத்து அநுபவிப்பிக்கிற என்னுடைய நிக்ரஹ ரூபமாகை யாலே அந்த நிக்ரஹபலமாய் வந்தவை நிக்ரஹத்துக்கு ப்ரதிகோடியான அநுக்ரஹத் தை நான் பண்ணினுல் அவ்விஷயத்தில் பின்னை கிடக்குமோ வென்கை இதுக்குக் கருத்தென்றபடி''

என்று தாத்பரியத்தை விசதீகரித்தருளினுராயிற்று. ஆக இதுவும் உக்தி சமத்காரமே யென்று கொள்ளவேணும்.

95. அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டு பேசிச் சக்ரவர்த்தி திருமகனுர் பக்கலில் மீண்டு வந்த மாருதி சொல்லுவதாக வைத்துக் கம்பர் பேசுகிருர்—

" விற்பெருந் தடந்தோள்வீர! வீங்கு நீரிலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன்,
இற்பிறப்பென்ப தொன்றும் இரும் பொறையென்பதொன்றும்
கற்பெனப் படுவதொன்றும் களி நடம் புரியக் கண்டேன்''

என்று. ரகு குல திலகனே! நான் இலங்காபுரியில் சீதா பிராட்டியைக்கண்டிலேன்; நல்ல குடிப் பிறப்பும் பொறுமைக் குணமும் கற்பு நிலையுமாகிய இவை மூன்றும் கூடிக் கூத்தாடுமதனைக் கண்டு வந்தேனத்தனை என்று அநுமன் கூறியதாகக் கூறிற்றிங்கு. பிராட்டியைக் கண்டிலேனென்றது பொய்யுரைதானே; நித்ய ப்ரஹ்ம சாரியான மாருதி பொய் சொன்னதாக வைத்துக் கூறிய விதனுல் என்ன லாபம்? என்று கேட்கக் கூடும். நல்ல குடிப் பிறப்பும் பொறுமையும் கற்பும் விளங்க நின்ற பிராட்டியைக் கண்டே னென்பதே இங்குத் தேறுங் கருத்து; "நங்கையைக் கண்டேன் நல்லேன்" என்றும் பதம் பிரிக்கப் பாங்காகக் கவி யியற்றினமையும் இங்கு விசேஷம். ஆனுலும் 'நங்கையக் கண்டேன் அல்லேன்' என்பதுதான் கவிக்கு முக்கியமாக விவக்ஷிதம். அசோக வனத் தில் கூத்துக் கண்டு வந்தேனே யொழியப் பிராட்டியைக் கண்டு வந்திலேன் என்பது மிகவழகிய வாக்விந்யாஸம். பிராட்டியைக் கண்டேனென்று சொன்னுல் அவள் கற பழியாமலிருக்கிருளா? கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டிருக்கிருளா? என்னுங் கேள்விகள் எழுமே; அதற்கு இடமில்லாதபடி சொல்லி வைத்தது கவி சமத்காரம். இதனையறியாது 'பிராட்டியை அநுமன் கண்டானென்பது வாமீகியின் கொள்கை; காண வில்லையென்பது கம்பரின் கொள்கை' என்று சிலர் கூறத் தலைப்பட்டால் அது வருந்தத் தக்கதே யாம். அன்னவர்களே ப்ரக்ருதவாதிகளுக்கு ஏற்ற துணைவராவர்.

96. முமுக்ஷுப் படியில் த்வயத்தில் திருவடிகளைப் பேசியிருக்கு மிடத்தில் ''பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்'' என்பது அற்புதமான திவ்யஸூக்தி. புருஷகாரம் செய்வதையே தொழிலாக வுடையவளான பிராட்டி கை விட்டாலும், *தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சித குரைக்குமேல் என்னடியார் அது செய்யார்.........* என்கிற பாசுரப்படியே பரிந்து நோக்குமவனுன எம்பெருமான் தானும் கை விட்டாலும் திருவடிகள் கைவிடா என்று இதனுல் சொல்லப்படுகிறது. பிராட்டியும் பெருமானும் கை விட்ட பிறகு திருவடிகள்

என்ன செய்ய முடியு மென்பதைச் சிறிது ஆராய்ந்து பார்க்கலாமே. திருவடிக்குத் தனியே ஒரு சக்தி கிடையாததலால் இங்ஙனே அருளிச் செய்த ஆசிரியருடைய திருவுள்ளத்தை ஆழ்ந்து பார்க்க வேணும். எம்பெருமானை நோக்கி 'நீ எம்மைக் காத்தருள வேணும்' என்பார்க்கு ரக்ஷணம் கிடைப்பது ஸந்தேஹமாயினும் திருவடிகளிலே விழுந்தார்க்கு ரக்ஷணம் கிடைப்பதில் ஸந்தேஹமில்லை என்பது தான் இந்த ஸ்ரீஸூக்தியின் தேர்ந்த கருத்தாகும். "अनतिक्रमणीयं हि चरणग्रहणम्-— அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்" என்பர்களன்றோ. *வண்புகழ் நாரணன் திண் கழல் சேரே" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் கழலுக்குக்கூறிய திண்மையை விவரிக்கத் தோன்றிய ரஸோக்தியன்றோ இது.

97. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (11—2. 2.) *வன்பேய் முலை வாங்கி யுண்ட அவ்வாயன் நிற்க, இவ்வாயன் வாய் ஏங்கு வேய்ங்குழல் என்னோடாடு மிளமையே* என்றது மிக விநோதமான பாசுரம். கண்ணபிரான் ஸாது வென்றும், அவன் திருப்பவளத்தில் வைத்தூதும் புல்லாங்குழல் தான் தன்னோடு சிறுச்சேவகஞ் செய்து தன்னை நலியப் பார்க்கிற தென்றும் பரகாலநாயகி பேசுகின்றாள். இதனின் மிக்க ரஸோக்தியுண்டோ? பெரிய திருமடலில் "தென்னிலங்கையாட்டியரக்கர் குலப் பாவை மன்னனிராவணன்றன் நல் தங்கை" என்றுள்ளது; பெரியாழ்வார் திருமொழியில் "தங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான்" என்றுள்ளது. இவ்விரண்டையும் கொண்டு, சூர்ப்பணகை நல்லவளே; அவளுடைய மூக்கு தான் பொல்லாது என்று உபந்யஸித்தால் கேட்பார்க்கு நகைச் சுவை மிகுமத்தனை.

98. பெருமாளை மீட்டுத் திருவயோதிக்கு எழுந்தருளப் பண்ணிக் கொண்டுபோக சித்திர கூடத்திற்கு வந்த பரதாழ்வான் ராம பாதுகைகளைப் பெற்றுக் கொண்டு மீண்டானென்பது வரலாறு. இதனைப் பாதுகாஸஹஸ்ரத்தில் அநுபவிக்கின்ற வேதாந்த வாசிரியர் "भृशातुरसहोदरप्रणय भञ्जनस्वैरिणा पदेन किमनेन मे-- ப்ருசாதுர ஸஹோதரப்ரணய பஞ்ஜநஸ்வைரிணா பதேந கிமநேநமே" என்று பாதுகையானது திருவடியின் தீமையைக் கண்டு திரும்பி விட்டதாகச் சொல்லுகிறார். (அதாவது) மிகவும் வருத்தத்தோடு வந்து பணிந்து வேண்டிக்கொண்ட தம்பி பக்கலிலே இரக்கங்காட்டாத இத்திருவடியோடு நமக்கு ஸஹவாஸம் போதும் போதுமென்றெண்ணிப் பாதுகை விட்டகன்றதாகக் கூறப்படுகிறது. இரக்கங் காட்டாதவர் பெருமாளா? திருவடியா? திருவடிக்குத் தானாக இரக்கங் காட்ட என்ன யோக்யதை யுள்ளது? பெருமாள் மீண்டெழுந்தருளினால் திருவடியும் உடன் செல்லுகிறது; அவர் புறப்படாவிடில் திருவடி இருந்த விடத்தே யிருக்கிறது. இவ்வளவே யொழிய வேறில்லையே. இராமபிரானுடைய இரக்க மின்மையைத் திருவடிகளின் மீது ஏறிட்டுரைத்தது உக்தி சமத்காரமே யாம். அந்த பாதுகா ஸஹஸ்ரந் தன்னிலேயே பாதுகைக்குத் திருவடிகளின் மீது ப்ரேமமுண்டானதற்குக் காரணங் கூறும் சுலோக மொன்று: "योषिद्भूतदृषन्ति अपोढशकटस्थेमानि वैमानिक स्रोतस्विन्युप लम्भनानि भसितोदञ्चत्परिक्षिन्ति च। दूत्यादिष्वपि दुर्वचानि पदयोः कृत्यानि मत्वेव= யோஷித்பூத த்ருஷந்தி அபோடசகடஸ்தேமாநி வைமாநிக ஸ்ரோதஸ் விந்யுபலம்பநாநி பஸிதோதஞ்சத் பரிக்ஷிந்தி ச; தூத்யாதிஷ்வபி துர்வசாநி பதயோ: க்ருத்யாநி மத்வேவ..." இத்யாதி. இதன் சுருக்கமான கருத்தாவது—எம்பெருமானுடைய திருவடிகள் கல்லைப் பெண்ணாக்கினவை, நந்த கோப க்ருஹத்தில் நலிய வந்த சகடத்தைச் சாடியவை, கங்கை நீர் கான்றவை, பாரதப் போரில் அபாண்ட வாஸ்த்ரப்ர யோகத்தினால் கரிக்கட்டையாய்ப் போன உத்தரையின் கருவை உயிர் மீட்டவை, பாண்டவர்களுக்காகக் கௌரவர்களிடம் தூது செல்ல உத்ஸாஹங் கொண்டவை என்னுமிக் காரணங்களினால் பாதுகையானது திருவடிகளில் பிரேமங் கொண்டிருந்தன வென்பதாம். இந்தப் பெருமைகள் திருவடிகளுக்குள்ளன வென்பது உண்மை. ஆனாலும் இப் பெருமைகளை ஸாக்ஷாத்தாகத் திருவடிகளுக்குச் சொல்லுவது உக்தி சமத்காரமே.

கல்லைப் பெண்ணாக்க நினைத்தவன் எம்பெருமான்; பொன்றச் சகட முதைத்தவன் எம்பெருமான்; * அயனலர்கொடு தொழுதேத்தக் கங்கைபோதரக் கால் நிமிர்த்தருளினவன் எம்பெருமான்; * உத்தரைதன் சிறுவனை யுய்யக் கொண்டவனும் எம்பெருமான்;* இன்னார் தூதனெனக் கோதில் செங்கோல் குடை மன்னரிடைத் தூது நடந்தவனும் எம்பெருமான். திருவடியே இவை செய்ததாகச் சொன்னது சமத்காரோக்தியே.

99. திருவாய் மொழியில் "வண் குருகூர் வண் சடகோபன் சொன்ன வாயிரத்துளிப் பத்தும் வானின் மீதேற்றி யருள் செய்து முடிக்கும் பிறவிமாமாயக் கூத்தினையே" என்னும் பாசுரமானது 'இப்பதிகந்தானே பிறவியை முடித்து வானின் மீதேற்றியருள் செய்துவிடும்' என்று கூறுகின்றது. இது ஸாக்ஷாத்தாக நடைபெறுங் காரியமன்று என்பதை ஆழ்வார்தாமே மற்றொரு பதிகத்தின் பலச்ருதிப் பாசுரத்தில் "சடகோபன் சொல்லாயிரத்துளிப்பத்தால் அருளியடிக்கீழிருத்தும் நம் மண்ணல் கருமாணிக்கமே" என்று நன்கு விளக்கியுள்ளார். முந்தின விடத்தில் எழுவாய் திருமொழி; பிந்தின விடத்தில் எம்பெருமான் எழுவாய். எம்பெருமான் தானே செய்தருளுங் காரியத்தை ஆழ்வார் திருவாய் மொழியின் மீது ஏறிட்டுரைத்தருளினாரென்பது வெளிப்படையாயிற்று. இன்னமுங் கேளீர்; "மிடைந்த சொல்தொடை ஆயிரத்துளிப் பத்து, உடைந்து நோய்களை யோடுவிக்குமே" என்று ஒரு பதிகந்தானே ஸாம்ஸாரிக ஸகல துரிதங்களையும் உருமாய்ந்து போம்படி பண்ணுமென்று சொல்லிற்று. இதன் கருத்தை "அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்தே" என்கிற பாசுரத்தினால் ஆழ்வார் தாமே வெளியிட்டார். நோய்களறுக்கும் மருந்து எம்பெருமான் என்றது இதில். எம்பெருமானுடைய செயலைப் பதிகத்தின் மீதேற்றி யுரைப்பதுண்டு என்பது இத்தாலும் காட்டப்பட்டதாயிற்று.

100. திருவாய்மொழி மூன்றாம் பத்தில் எட்டாவது பதிகம்*முடியானே! மூவுலகும் தொழுதேத்துஞ் சீரடியானே* என்பது. இப்பதிகத்தின் பிரமேயத்தை மணவாள மாமுனிகள் நூற்றந்தாதியில் "முடியாத வாசை மிக முற்றுக் கரணங்கள், அடியார் தம்மை விட்டு அவன்பாற்படியா-ஒன்றொன்றின் செயல் விரும்ப உள்ளதெல்லாம் தாம் விரும்ப" என்னும் பாசுரத்தினால் விளங்க வைத்தருளினர். ஒரு கரணத்தினுடைய செயலை மற்றொரு கரணம் ஆசைப்படுவதாக இப்பதிகத்தில் அநுபவம். இவ்வநுபவத்தைக் கூரத்தாழ்வான் வரதராஜ ஸ்தவத்தில் "त्वक् च दृक् च निपिपासति जिह्वा विह्वला श्रवणवत्परवृत्तौ—த்வக் ச த்ருக் ச நிபிபாஸதி ஜிஹ்வா விஹ்வலா ச்ரவணவத் பரவ்ருத்தௌ" என்கிற சுலோகத்தினால் தாம் அநுகரிக்கிறார். ஒரு கரணத்தின் செயலை மற்றொரு கரணம் விரும்புவதென்றால் என்ன? அந்த * முடியானே பதிகத்தில் *என்று கிடக்கு மென்னெஞ்சமே* *என்னு மெப்போது மென் வாசகமே* *என்று தடவு மென்கைகளே* *காண விரும்புமென் கண்களே* *திண் கொள்ள வோர்க்கும் கிடந்தென் செவிகளே* *அவி யின்றி யாதரிக்குமென தாவியே* என்றுள்ள பாசுரங்களை ஆழ்ந்து நோக்க வேணும். கண், கை, செவி முதலான வுறுப்புகட்குத் தனியே ஒரு ஆசையும் ப்ரவ்ருத்தியு முளதோ? அப்பதிகந் தன்னிலேயே *கூவியுங் காணப் பெறேனுன கோலமே* உன்னை யென்னாள் கண்டு கொள்வனே* *உன்னை யெஞ் ஞான்று பொருந்துவனே* *இருந்திருந்து எத்தனை காலம் புலம்புவனே* என்று ஆழ்வார் தம்மையே எழுவாயாக வைத்துக் கூறியுள்ள பாசுரங்களில் ஏதேனும் விசிகித்ஸை யுண்டாகக் கூடியதுண்டோ? தம்மை எழுவாயாக வைக்காமல் தம்முடைய கரணக்ராமங்களை எழுவாயாக வைத்துப் பேசுவது உக்தி சமத்காரமத்தனையே. ஆனால் * भक्तिप्रभाव भवदद्भुत भावबन्धसंधुक्षित प्रणयसार रसौघपूर्णः। वेदार्थ रत्ननिधिरच्युत दिव्य धाम जीयात्पराङ्कुश पयोधि रसीम भूमा = பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸம்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:, வேதார்த்த ரத்நநிதிரச்யுததிவ்யதாம ஜீயாத் பராங்குச பயோதி ரஸீமபூமா* என்று கூரத்தாழ்வானருளிச் செய்த படியே அத்புத பாவ

பந்தங்கள் தலையெடுக்கப் பெற்றுப் பேசுகின்ற ஆழ்வார் பக்கலிலே உக்தி சமத்காரமே யுள்ளதாகப் பேசுவதற்கில்லை. இது நிற்க.

101. ஆழ்வாருடைய வேறொரு பாசுரம் கேளீர்; "என்னுடை நன்னுதல் நங்கைமீர்காள்! யானினிச் செய்வதென்? என்னெஞ்சென்னை..." என்று ஒரு கதையருளிச் செய்கிறார். அதாவது, அசேதநமான சித்தமானது ஆழ்வார் தம்மை நோக்கி 'எம்பெருமானைப் பிரிந்த வுனக்கு நான் கரண மாவேனல்லேன்' என்று தான் ஸந்ந்யாஸம் பண்ணி விட்டதாக உறவறச் சொல்லித் தம்மை விட்டு நீங்கிப் போனதாக இப்பாசுரத்தில் சொல்லப்படுகிறது. உண்மையில் இப்படி நடந்ததாக வஸ்து ஸ்திதி யுளதோ!

102. திருவிருத்தத்தில் ஒரு பாசுரம்; "அன்னஞ் செல்வீரும் வண்டானஞ் செல்வீரும் தொழுதிரந்தேன், முன்னஞ்செல்வீர்கள் மறவேன்மினோ, கண்ணன் வைகுந்தனோடென்னெஞ்சினாரைக் கண்டால் என்னைச் சொல்லி அவரிடை நீர் இன்னஞ் செல்வீரோ? இதுவோ தகவென் றிசைமின்களே" என்பது. அன்னம் முதலிய சில பறவைகள் இயற்கையாக வானத்திற் பறந்து திரிந்து கொண்டிருந்தன. வானத்திற் பறப்பவை யெல்லாம் எம்பெருமானைத் தொழுவதற்கு விண்ணுலகம் நோக்கிச் செல்லுவதாக ஆழ்வாருடைய நினைவு. அதனால் 'ஓ பறவைகாள்! உங்களைத் தலையால் வணங்கி வேண்டிக் கொள்ளுகிறேன்; நீங்கள் மிக விரைந்து செல்லுகின்றீர்கள்; உங்களில் முந்துற முன்னம் விண்ணுலகத்துச் சென்று சேருமவர் எனது வேண்டுகோளை மறந்திடாமல் நிறைவேற்ற வேணும்; அது யாதெனில், என்னுடைய நெஞ்சினார் ஸ்ரீவைகுண்டநாதனை இங்கே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வருவதாகவோ அல்லது ஏதேனும் ப்ரஸாதம் பெற்று வருவதாகவோ நித்ய விபூதிக்குச் சென்றார்; இன்னமும் மீண்டுவரக்காணோம். நான் இவ்விடத்திலே இவ்வுலகத்தவரால் உபேக்ஷிக்கப்பட்டு அவஸ்துவாகப் புளியம் பொந்தின்கீழே கிடந்தேனாகிலும் அங்குச் சென்ற என்னெஞ்சினார் அங்குள்ளாரால் கௌரவிக்கப் பெற்றுச் சீரிய சிங்காசனத்திலமர்ந்து மேனாணிப்புத் தோற்ற வீற்றிருப்பர்; எம்பெருமானுடைய அந்தரங்க ஸந்நிதானத்திலே யிருப்பர்; கண்டவாறே அவர் இன்னாரென்று நீங்கள் கண்டுணரப் பெறலாம்; கண்டு 'ஓய்! நீர் குருகூர்ச்சடகோபனென்னும் பராங்குச நாயகியின் நெஞ்சினாரன்றோ?' என்று அவர்க்கு என்னை நினைப்பூட்டி 'உம்மை அவர் இங்கே யனுப்பி எத்தனை நாளாயிற்று? இன்னமும் இவ்விடத்திலேயே இருக்கிறீரே; வந்த காரியத்தைப் பார்த்துக் கொண்டு விரைந்து மீண்டு செல்லாதே இங்ஙனே தாமதித்திருப்பது தகுதியோ? அந்தரங்கமென்று அவர் உம்மைத் தூதனுப்பினதற்கு இதுவோ தக்க செயல்? என்று உறைக்கச் சொல்லுங்கோள் என்று நெஞ்சைக் குறித்துத் தூது விடும் பாசுரம் இது. எம்பெருமானைக் குறித்துத் தூது விடும் பாசுரங்கள் திவ்வியப் பிரபந்தங்களில் பலபல இருந்தாலும் நெஞ்சைக் குறித்துத் தூது விடும் பாசுரமானவிது மிக விலக்ஷணமானது. இப் பாசுரம் முழுவதும் நிகரற்ற சமத்காரோக்தி யென்பதை அறியாதாருளரோ?

103. திருமங்கையாழ்வார் இப் பாசுரத்தை ஒருபுடை யடியொற்றிச் சிறிய திருமடலில் "வாராய் மட நெஞ்சே வந்து; மணிவண்ணன் சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளித், தாரான் தருமென்றிரண்டத்தி லொன்றதனை, ஆரானு மொன்னுதார் கேளாமே சொன்னக்கால், ஆராயுமேலும் பணி கேட்டு அதன்றெனிலும், போராதொழியாதே போந்திடு நீ யென்றேற்குக், காரார் கடல் வண்ணன் பின்போன நெஞ்சமும், வாராதே யென்னை மறந்தது தான்" என்றருளிச் செய்தனர். "यद्धि मनसा ध्यायति तद्वाचा वदति" என்றும் "मन: पूर्वो वागुत्तर:" என்றும் வேத மோதுகின்றது. வாக்கு ஒன்றைச் சொல்ல வேண்டுமிடத்து நெஞ்சு துணை செய்தே யாகவேண்டும். மநஸ்ஸஹகார மின்றிக்கே பேசப் படும் பேச்சு உன்மத்த பாஷித மெனப்படும். மனம் தம்மை விட்டுப் பிரிந்து போனதாகவும், மீண்டு வரவேயில்லையாகவும், அதைக் குறித்துத் தூது விடுவதாகவும் பாசுரம் கண்டால் இதன் கருத்தை உய்த்துணர

வேண்டாவோ? தலைவனிடத்திலேயே நெஞ்சு நன்ருகப் பதிந்து விட்டது என்பதைத் தெரிவிக்க வன்றோ இத்தனை உக்தி சமத்காரங்கள்.

104. இராவணனை ஸம்ஹரித்தவன் இராகவனே யென்பதில் யாருக்கும் ஸந்தேஹமோ விவாதமோ இராது. *இராக்கதர் வாழிலங்கை பாழாளாகப் படை பொருதான்* *தென்னிலங்கை மன்னன் சிரந்தோள் துணி செய்தான்* *மதிளிலங்கைக் கோவைவீயச் சிலை குனித்தான்* *கொம்புபோல் சீதை பொருட்டிலங்கை நகர் அம்பெரியுய்த்தவர்* பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தான்* *வற்ரு நீள் கடல் சூழிலங்கை யிராவணனைச் செற்ருன்* என்றிப்படி எண்ணிறந்த பாசுரங்களன்ரோ வுள்ளன. இவை இங்ஙனேயிருக்க, வான்மீகி பகவான் மந்தோதரியின் வார்த்தையாக வைத்துப் பேசியிருப்பது பாரீர்,

"इन्द्रियाणि पुरा जित्वा जितं त्रिभुवनं त्वया।
सरद्भिरिव तद्वैरम् अद्य तैरेव निर्जितः॥

இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா,
ஸ்மரத்பிரிவ தத்வைரம் அத்ய தைரேவ நிர்ஜித:"

என்று ப்ரேதனை ராவணனை நோக்கி மந்தோதரி கூறுவதாகவுள்ளது. இதன் கருத்தைச் சிறிது விவரிக்கிறோம். இராவணன் மூவுலகையும் வென்று ப்ரஸித்தி படைத்தவன். அங்ஙனம் வெற்றிபெறும் படியான மிடுக்கு அவனுக்கு எங்ஙனமுண்டாயிற்றென்னில்; கோர மாதவஞ் செய்ததனாலுண்டாயிற்று. அப்படி தவஞ் செய்யும்போது இந்திரியங்களைப் பட்டிமேயவொண்ணாதபடி அடக்கி ஆண்டாலொழியத் தவம் பயன் பெருதாதலால் இந்திரியங்களைச் சிறையிலிடவேண்டியது இன்றியமையாததாயிற்று. அதனால் கறுவு கொண்டிருந்த அவை சமயம் பார்த்து இராவணனைப் பங்கப்படுத்தினதாக இங்குக் கூறப்பட்டது. "तद्वैरं सरद्भिः तैरेव अद्य निर्जित :— தத்வைரம் ஸ்மரத்பி: தைரேவ அத்ய நிர்ஜித:" ராவணா! பழைய வைரத்தை நினைவு வைத்துக்கொண்டிருந்த அந்த இந்திரியங்களினாலேயே நீ கொல்லப்பட்டனை" யென்ருள் மந்தோதரி. 'தைரேவ' என்கிற ஏவகாரத்தினால் 'ஸ்ரீராமனால் நீ கொல்லப்பட்டாயல்லை' என்பது ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டதாகிறது. இவளே முன்னம் இராமனே உன்னைக் கொன்ருனென்று சொல்லி வைத்துப் பின்னை இங்ஙனே சொன்னது உக்தி சமத்கார மத்தனை. ஜிதேந்திரியனாயிருந்த நீ இந்திரியகிங்கரனானமையால் இக்குற்ற மடியாகவே உன்னை இராமபிரான் கொன்ருெழித்தனன் என்கிற விவக்ஷிதம் இங்ஙனே சுவை மிக்க சொற்ருெடரினால் தெரிவிக்கப்பட்டதென் றுணர்க. "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது ப்ரபத்தி" என்ருலும், திருநாம ஸங்கீர்த்தனம் என்ருலும் ப்ரபத்தியினால் ப்ரஸந்நனான எம்பெருமானே புடைவை சுரந்தான், ப்ரபத்தியின் உள்ளீடான திருநாம ஸங்கீர்த்தனத்தினால் ப்ரஸன்னனான எம்பெருமானே புடைவை சுரந்தான் என்று கொள்ளப்படும். ... ... *

105. த்ரௌபதிக்குப் பலனளித்தவன் பகவானே யென்பதைத் தடையின்றியொப்புக்கொள்ளுகிருேமென்றும், பலனளிப்பதற்கு நாமஸங்கீர்த்தனம் கரணமாயிருந்ததென்று ஒப்புக்கொண்டே தீரவேணுமென்றும் பிறர் வாதிப்பது பயனற்றது. தன்னுடையக்ருபையே காரணமாகப் பலனளிக்கும் பகவானுக்கு ஒரு வியாஜம் வேண்டியிருந்ததென்று நூற்கொள்கை. அந்த வியாஜம் ஸ்ரீவசநபூஷணத்தி ஸித்தமான ப்ரபத்திதான். திருநாமமிறே யென்றது அந்த ப்ரபத்தியின் நாமாந்தரமேயாகுமத்தனை. இதனுடைய வைசத்யத்தை இதர பரிச்சேதங்களில் கண்டு கொள்க. ...... *

ஐந்தாவது பரிச்சேதம் முற்றிற்று.

---

# ஸர்வஜ்ஞ லோககுரு ஸூக்தி ஸர்வஸ்வத்தில்

## ஆறுவது பரிச்சேதம்.

— ஸம்ப்ரதாய விருத்தோக்தி நிரஸநங்கள். —

106. "த்ரௌபதீ ப்ரபத்திக்குக் கிடைத்த பலன்கள் யாவை? எப்போது கிடைத்தன?" என்கிற கேள்விகள் எழுவதாக எழுதுபவர்கள் "த்ரௌபதி தன்னுடைய ப்ரபத்தியினால் விரும்பிய பலன் எது?" என்கிற முக்கியமான ஒரு கேள்வியை விட்டிட்டு உபயோகமற்ற கேள்விகளை யெழுப்புவது என்னோ? அவள் அபேக்ஷித்த பலன் இன்னது? பெற்ற பலன் இன்னது என்று ஒரே பேச்சில் முடிக்கவேண்டியதை விட்டு வீணான க்ரந்த விஸ்தாரம் செய்து விவாதத்தைக் காடு பாய விடுவது ப்ராமாணிகர்களின் பணியன்று. த்ரௌபதியின் கதையை நாம் தெரிந்துகொள்வது ஸ்ரீவசநபூஷணத்தாலுமன்று, முமுக்ஷுப்படியினாலுமன்று. மஹாபாரதமொன்றினால்தான் தெரிந்து கொள்ளவேண்டும். அந்த மஹாபாரதத்தில் அவள் மானஹாநி பரிஹாரத்தைக் கோரினதாகச் சொல்லப்பட்டுளதேயன்றி வேறொன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை. "எனக்கு வஸ்த்ரம் வேணும்" என்று அவள் ப்ரார்த்திக்க அவகாஶமே கிடையாது. அப்போது அவள் வஸ்த்ரஹீநையா யிருக்கவில்லையன்றோ. ஆண்டாள் *கோழி யழைப்பதன் முன்னம் பதிகத்தில் அநுபவிக்கிற திவ்ய சேஷ்டிதத்தின்படி பொய்கையில் குடைந்து நீராடும் கோபிகள் துகிலிழந்திருந்தபடியால் அவர்கள் *துகிலைப் பணித்தருளாயே* குருந்திடைக் கூறை பணியாய்* கூறை தாராய்* என்று வஸ்த்ரத்தை யபேக்ஷிக்க ப்ரஸக்தி யிருந்ததனால் அதை யபேக்ஷித்துப் பெற்றார்கள். த்ரௌபதியோ வென்னில் துகிலிழந்திருக்கவில்லை. ஆகவே அவள் வஸ்த்ரத்தை அபேக்ஷிக்க ப்ரஸக்தியே கிடையாது. அதை அபேக்ஷித்ததாக பாரதத்தில் சொல்லப்படவுமில்லை. கண்ணபிரான் சேலையை வளரச் செய்து நம்முடைய ஆபத்தைப் போக்கப் போகிறான் என்பதும் அவளுக்குத் தெரியாது. *உஹத்யாவதி ஸம்வாதே படியே கோவிந்த ஸ்மரணம் செய்தாள். அதுதான் ப்ரபத்தி. அது மஹாபாரத முட்பட ஸகல ப்ரமாண ஸித்தம்.

107. "இருகையும் விட்டேனோ த்ரௌபதியைப் போலே" என்ற ப்ரஸித்தமான வாக்யத்தின்படி அவள் அப்போது இருகையும் விட்டதாக ஸூசனையுள்ளது பாரதத்தில். *ப்ராலாபிஷ்டாபிவிதா ராஜஸு உபவஸாஹாஸ்ய ஹஸிதீ* என்றிருக்கிறது. முகத்தை மூடிக்கொண்டு அழுதாளென்கையாலே, சேலையைப் பற்றியிருந்த கைகளினால் முகத்தை மறைத்துக் கொண்டழுதமை விளங்குகின்றது. *ப்ரபந்நாம் பாஹி கோவிந்த குருமத்யேவஸீதீம்* என்று தன்னை ப்ரபந்நையாகவும் தானே முக்தகண்டமாகச் சொல்லியிருக்கிறாள். சேலையையும் இறுகப் பற்றிக் கொண்டிருந்தாளாகில் ப்ரபத்தி தேறுவதற்கு வழியேயில்லை.

108. நம் ஆசாரியர்கள் "பகவத்ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" என்று ஶிக்ஷித்திருக்கிற ப்ரபத்தி லக்ஷணம் கஜேந்திராழ்வானுடையவும் த்ரௌபதியினுடையவும் சரித்திரத்தைக் கொண்டே யென்பதை யுணரவேணும். *கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே* என்ன நின்ற ப்ரவ்ருத்தி கஜேந்திராழ்வானுக்கு ரக்ஷகமாகாததோடு பகவான் செய்யவேண்டிய ரக்ஷணத்திற்கு விரோதியாயு மிருந்தபடியாலே அதனை அவன் விட்டொழித்ததுதான் அவனுக்கு ப்ரபத்தி. அப்படியே தெளிவு பெற்ற த்ரௌபதியும் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிற ப்ரபத்தியையே முக்கியமாகச் செய்தாள். "த்ரௌபதி

லஜ்ஜையை விட்டாள்" என்ற ஸ்ரீவசநபூஷண ஸூக்திக்கும் இதுவேதான் கருத்து. லஜ்ஜையினால் துகிலை இறுக்கிக் கொண்டிருந்த நிலைமை நீங்கிற்றென்றபடி. இதிலிருந்து தேறியது ஸ்வவ்யாவ்ருத்தி நிவ்ருத்திதான். 'பிரானே! அபரிஹார்யமாக நேர்ந்திருக்கிற என் கஷ்டத்தைப் போக்கியருளவேணும்' என்றிவ்வளவே அவள் ப்ரார்த்தித்தது. "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்றருளிச் செய்த பிள்ளைலோகாசார்யர், சரித்திரத்தின்படி அவள் பெற்றதாகத் தேறின பலனை யருளிச் செய்தாரே யொழிய வேறில்லை. "அவள் கோலின பலன் என்று அர்த்தமா? பெற்ற பலன் என்று அர்த்தமா? என்று பிறர் செய்யும் விசாரணைக்குச் சிறிது மிடமில்லையென்று பண்டே நிரூபித்தோம். "கிடைத்த பலன் என்றால் பெருமாளுக்கு ப்ரபத்தியினால் ஸமுத்ர தரணம் கிடைக்கவில்லையே" யித்யாதிகளை யெழுதிக் காடு பாய்வது எதற்கோ? மஹா வாக்யங்களில் ஔசித்யத்திற்கு ஏற்ப வசன விபரிணாமம், விபக்தி விபரிணாமம் முதலிய பல விபரிணாமங்கள் சாஸ்த்ரஜ்ஞ கோஷ்டிகளில் ப்ரஸித்தம். அதனால் ப்ரக்ரம பங்கமென்பது ஈஷத்தும் வாராது. கிம் பஹுநா? த்ரௌபதி வஸ்த்ர வ்ருத்தியை அபேக்ஷித்ததாக மஹாபாரதத்தில் ஒரு மூலையிலாவது ஒரு சிறு வசனமாவது காட்டிவிட்டால் இந்த விவாதம் ஓய்ந்துவிட்டதே. ஸ்ரீவசநபூஷண முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திகளின் மரும மறியாமல் க்ரந்த விஸ்தரம் செய்வது வீண்.

109. த்ரௌபதியின் மானஹாநி பரிஹாரத்தைக் கண்ணபிரான் பலவழிகளாலே செய்ய வல்லவன். அந்தப் பல வழிகளில் ஒரு வழியை வஸ்த்ர வ்ருத்தியினாலே செய்தான். பிறர் எழுதுகையில் "த்ரௌபதி உபாயாந்தரங்களை விட்டுப் பரிபூர்ணமான சரணாகதியைச் செய்த பின்பு இவளுக்கு மஹா விச்வாஸம் நிலைத்து நிற்கிறதாவென்று பரீக்ஷிப்பதற்காகப் பரமபுருஷன் சில கணங்கள் தாமதிக்க, அடுத்த க்ஷணத்திலேயே பலன் வாராமையாலே கணத்துக்குக் கணம் பெருகிவரும் ஆபத்தாலே அறிவு கலங்கி ப்ரபத்தியிலே மஹா விச்வாஸம் சிறிது தளரப் பெற்று அவனைக் காட்டிலும் விஞ்சிய மஹா ப்ரபாவமுள்ள கோவிந்த நாமமாவது நம்முடைய மானத்தையாவது காக்காதா? என்னும் நினைவுடன் கோவிந்த நாமத்தை உபாயத்வ புத்தியுடன் உச்சரித்து விட்டாள்; உபாயாந்தர ஸம்ஸர்க்கத்தாலே சணல் கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே ப்ரபத்தி தடைபட்டு விட்டது. உபாயத்வ புத்தியுடன் உச்சரிக்கப்பட்ட கோவிந்த நாமம் புடவை சுரந்து த்ரௌபதியின் மானத்தைக் காத்தது என்று கொள்ளவேண்டியது அவசியமாகிறது" என்றுள்ள வாக்யங்கள் அது வழிக்கவும் தகாதவை. இப்படி யெல்லாம் கைபோன போக்கிலே யெழுதப்பெறுவதைவிட த்ரௌபதிக்கு மஹத்தான பரிபவமோ விபத்தோ வேறில்லையே. *ஹா ப்ரீகஷ் உ.நிஷ் உஷ குரு ணா: கோயம் விதேஃ வகூ:* என்று இளம்பிராயத்தில் மாலதீ மாதவீயத்தில் வாசித்தபோது எனக்குப் பெருகின கண்ணீர் வெள்ளங் கோத்துப் பெருகுகின்ற திப்போது. த்ரௌபதியிடத்திலே கண்ணபிரான் எப்படிப்பட்ட பக்ஷபாதமுடையவனென்பதை இதில் இரண்டாவது பரிச்சேதத்தின் தொடக்கத்தில் ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி நதிகளால் விளக்கியுள்ளோம்.

110. த்ரௌபதியையா கண்ணபிரான் பரீக்ஷிப்பது. அவள் ப்ரபத்தியும் செய்யவில்லை, நாம ஸங்கீர்த்தனமும் செய்யவில்லை, எதுவும் செய்யவில்லை, காஷ்ட பாஷாண ஸந்நிபையாயிருந்தாளென்று வைத்துக் கொள்வோம். கண்ணபிரான் கைவிட்டு விடுவனா? *உள்ளுவார் உள்ளிற்றெல்லா முடனிருந் தறியு மவனான கண்ணபிரானுடைய உள்ளம் த்ரௌபதி துடிப்பதற்கு முன்னமே தொடரிலிட்ட ஈயம்போலே துடித்திருப்பதில் ஐயமுண்டோ? பகவான்

பரீக்ஷிப்பதற்கு இன்னுரிணையாரென்று கிடையாதா? ஸமயந்தான் கிடையாதா? அவளா இலக்கு? அதுவா ஸமயம்? கண்ணன் அவளைப் பரீக்ஷிக்க நினைத்தானென்றும் சில கணங்கள் தாமதித்தானென்றும் ஒரு ஆசாரியர் எழுதி வைத்திருப்பதுண்டா? *முந்தி வானம் மழை பொழிய மூவா வுருவின் மறையாளர், அந்தி மூன்று மனலோம்பு மணியார் வீதி யழுந்தூரே* என்ற திருமங்கையாழ்வார் பாசுரப்படி கண்ணன் காத்தருளினது முன்னும், அவள் கூக்குரலிட்டது பின்னுமாகவன்றோ நிகழ்ந்திருக்கும். "அடுத்த க்ஷணத்திலேயே பலன் வரக் காணாமையாலே" என்றெழுதுவதற்கு அணுவளவேனும் வ்யஸக்தியுண்டோ? "அறிவு கலங்கி வ்யபத்தியிலே மஹாவிச்வாஸம் சிறிது தளரப் பெற்று" என்றது வெகு அழகு. 'முற்றிலும் தளரப் பெற்று' என்றெழுதாதே சிறிது தளரப் பெற்றென்கிற உபசாரம் எதற்கோ? அவளுக்கு மஹா விச்வாஸம் அறவே தொலைந்திட்டதென்றெழுதினால்தான் அடிப்பாரார்? கோவிந்த நாமத்தை உபாயத்வ புத்தியுடன் உச்சரித்து விட்டேனென்று அவளே வந்து சொன்னாள் போலும். இப்படி யெல்லா மெழுத வேண்டுமானால் மஹர்ஷி யொருவர் எழுதவேண்டும். மஹர்ஷிகளில் விஞ்சிய மஹாவ்யபாவம் பெற்ற ஆசார்யர்களு மெழுதலாம். ஒருவரும் ஒரு பர்வமு மறியாதிருக்க, தாமெழுதுவதே தத்துவமென்று கொண்டு தத்தக பித்தக தாலேலோ கதையாய் எழுதுமவற்றைக் கண்டும் நம் உயிர் போகாம லிருப்பதற்குத்தான் நாம் வருந்தவேண்டும். "பொறுப்பரியனகள் பேசில் போவதே நோயதாகி" என்ற திருமாலைப் பாசுரத்திற்கு இதைவிட வேறு லக்ஷ்யமுண்டோ?

111. "கிணற்றங்கரை யருகில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தை தவறிக் கிணற்றில் விழுந்திட்டது. முற்றத்திலிருக்கும் மாதா அதைக் கண்டுகொண்டே யிருக்கிறாள். ஆனால் பதறி யோடிச் செல்லவில்லை. பையன் ஓடிவந்து தாயிடம் கத்துகிறான். 'கிணற்றில் விழுந்த குழந்தை என்னைக் காப்பாற்ற வேணுமென்று வ்யபத்தி செய்யவில்லையே; அதற்கு என்னிடத்தில் மஹாவிச்வாஸ மிருக்கிறதென்று நான் எப்படி நம்புவது? *ஸ்வயாசநா ந ரக்ஷேயம்* என்றல்லவோ ஶாஸ்த்ரமுள்ளது. உச்சாஸ்த்ரமாக நான் எப்படி ரக்ஷிக்க முன்வர முடியும்? என்று மாதா சொல்லி வாளாவிருந்தாள்" என்று ஒருவர் கதை யெழுதினால் இதில் எவ்வளவு சுவையிருக்குமோ அவ்வளவு சுவைதான் இவர்களுடைய லேகனங்களி லுள்ளது. த்ரௌபதியைப் பரீக்ஷிக்க வெண்ணித் தாமதித்தான் கண்ணனென்றால் "த்ரௌபதீ பரிபவம் கண்டிருந்தது க்ருஷ்ணாபிப்ராயத்தாலே வ்யாஜ தோஷம்" என்ற ஸ்ரீவசநபூஷண ஸூக்தி அர்ஜுநனைப் பற்றி அவதரித்ததுபோல ஸ்ரீக்ருஷ்ண பகவானைப் பற்றியு மவதரிக்க என்ன தடை? த்ரௌபதீ பரிபவம் முதலே நேராதபடி காத்தருள ஶக்தனாயிருந்தும் அது நேர்ந்த பிறகும் பரீக்ஷையிலே யூன்றித் தாழ்த்திருந்தானென்றால் இவனின் மிக்க கொடியா னுளனோ?

112. *உலகமுண்ட பெருவாயா* என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி யொன்று போதும் ஸ்வச்சந்த பாஷிகளைத் தகர்க்க. அந்த ஸ்ரீஸூக்தி ததி வருமாறு:—

> "[பெருவாயா!] த்ரௌபதி ஶரணமென்ற உக்தி யித்தனையும் திருவுள்ளத்தே கிடந்து ஸபஸ்ஸில் அவன் பரிபவித்த பரிபவத்தையும் பரிஹரித்து துர்யோதநாதிகளையும் நிரஸித்து தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்து, பின்பும் *ருணம் ப்ரவ்ருத்தமிவ மே* என்று குறைவாளனாய் பரமபதத்துக்கெழுந்தருளுகிறபோதும் *நாதிஶாந்தமநா:* என்று திருவுள்ளத்தில் புண்ணோடே யிறே யெழுந்தருளிற்று." என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

இதில் ஒவ்வொரு வார்த்தையும் விலையுயர்ந்தது. த்ரௌபதிக்குக் கண்ணபிரான் செய்தருளின [குழல் முடிப்பித்த வளவான] ஸகல காரியங்களுக்கும் அவள் ஶரணமென்ற உக்தியித்தனையே நிதானமென்று காட்டப்பட்டது முக்கியம்.

113. பாரதாதி தனிச்லோக முடிவில் "ஶரணாகதா மென்கையாலே உபாயாத்யவஸாயம் சொல்லித் தலைக்கட்டுகிறது" என்று பெரியவாச்சான் பிள்ளை ஸித்தாந்த முரைத்தபடி அவள் மாநஸமான அத்யவஸாயத்தில் குறையற்றிருக்கச் செய்தேயும் ஶரணமென்ற உக்தி மாத்ரத்தையே கண்ணன் குவாலாகக் கொண்டதாய் நம்பிள்ளை காட்டியருளினது பரம ரஸம். "உவட்கீத்திலன் யான் உவள்பால் பட்ட, தனிசு தீராமே தணப்பதே யென்ற" என்று ஒரு பெருந்தமிழ ரெழுதி யுள்ளபடி எத்தனை செய்தும் ஒன்றும் செய்திலனாக வருத்தங் காட்டுவது எம்பெருமானுடைய அப்ரமேயமானதொரு குணம். *ஐச்வர்ய மக்ஷர கதிமித்யாதி ஸ்ரீகுண ரத்ந கோச ச்லோக ரத்னத்தையும், *ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்கு என் செய்வனென்றே யிருத்தி நீ* என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தையும் இவ்விடத்திற்குச் சேர வநுஸந்திப்பது. *மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த* என்று சொல்லி வாய் மூடுவதற்குள்ளே *தனியன் பிறப்பிலி தன்னை* என்னுநின்றா ராழ்வார். இதன் கருத்தை நம்பிள்ளை தவிர வேறு யார் உரைக்க கிற்பார்? அவ்விடத்து ஸ்ரீஸூக்திகளை யெடுத்து ஸேவிக்க.

114. "நம் பேர் தன் காரியம் செய்த தத்தனை போக்கி நாம் இவளுக்கொன்றும் செய்திலோமிறே என்றிருந்தான்" என்கிற திவ்யஸூக்தி எங்குள்ளதோ, அங்கு முன்னே யுள்ள ஸ்ரீஸூக்திகள் இவை—"த்ரௌபதி திருநாமஞ் சொல்ல—கோவிந்தா! என்றவாறே நம் பேரைச் சொன்னாளென்று திருவுள்ளம் புண்பட்டிருக்கு மவனிறே. [க்ருஷ்ணே மாம் தூரவாஸிநம்] அவளைக் கொண்டாடா, தன்னை நிந்தியா வ்யஸநப் பட்டானிறே. அப்போது ஸதஸ்ஸில் பிறந்த பரிபவம் பரிஹ்ருதமாகச் செய்தேயும் நம் பேரைச் சொல்லிக் கூப்பிட்டவளுக்கு ஆற்றாமையிலே முகங் காட்டப் பெற்றிலோமென்று உள்ளதனையும் இழவுபட்டிருந்தானிறே." என்பவை. மஹா குணஶாலியான ஒரு புருஷ புங்கவனுக்கு அமையவேண்டிய குணமிது. ஒரு குறை யின்றிக்கே எல்லாம் செய்து தலைக்கட்டி விட்டேனென்று சொல்லுவதும் நினைப்பதும் காபுருஷனுடைய க்ருத்யமிறே. "என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந் தன்னை யகல்விக்கத் தானும் கில்லானினி" என்னுமாபோலே இன்சுவை ததும்ப வெளிவரும் ஸ்ரீஸூக்திகளை அநுபவிக்க வேண்டிய முறையில் அநுபவிக்க வறியாதாரோடும் பிறவாதாரோடும் பிணங்குமாறு ஶிரஸிஜாஞ்லிவ ஜாஞ்லிவ ஜாஞ்லிவ.

115. கோபிகளின் ஸமாதியாலே நம்மாழ்வாரும் பேசுகிறார் ஆண்டாளும் பேசுகிறாள். இருவரும் ப்ரணய ரோஷம் தலையெடுத்துப் பேசுமளவிலே "இன்றிவ் வாயர் குலத்தை வீடுய்யத் தோன்றிய கருமாணிக்கச் சுடர்" என்கிறார் ஆழ்வார். "கஞ்சன் வலை வைத்த வன்று காரிருளெல்லில் பிழைத்து, நெஞ்சு துக்கஞ் செய்யப் போந்தாய் நின்றவிக் கன்னியரோமை" என்கிறா ளாண்டாள். இவ்விரண்டு பாசுரங்களையும் நோக்கினவர்கள், ஆயர் குலத்தை உஜ்ஜீவிப்பிக்க வந்ததாகச் சொன்னது மெய்யா? கன்னியர்களை நெஞ்சு துக்கம் செய்ய வந்ததாகச் சொன்னது மெய்யா? என்று கேட்டால் இரண்டையும் ஸமந்வயப்படுத்தி ரஸமாகச் சொல்லகில்லாதார் திசைதொறும் விழித்து நிற்குமாபோலே இவர்களும் நிற்கலாம்.

ஆறுவது பரிச்சேதம் முற்றிற்று.